லேசான காகிதப்பதிப்பு.
தனிப்பிரதி, 5½ அணா.
பழைய பிரதி, 6 ,,

சந்தாவிலை விவரம்.
ஒரு வருஷத்துக்கு ரூ 4.
6 மாதத்துக்கு ,, 2-2.




அறிவைப்பரவச்
செய்வதற்கான

மாதாந்தரத்
தமிழ்ப்பத்திரிகை.

*The Publishing Agency reserves to itself the right of republishing separately matters that appear in the Viveka Chintamani.*

[புஸ்]த்தகம் 10.] 1902ஞு மார்ச்சுமீ. [இலக்கம் 11.

## Terms of Subscription to the 'Viveka Chintamani.'

**Thick Paper Edition** for Patrons, Reading Rooms, School and Circulating Libraries, &c.

Minimum Subscription Rs. 5 per annum.

Single Copy 7½ As. : Back Nos. 8 As. each.

ENGLISH & FOREIGN SUBSCRIPTION 7*s.* 6*d.* NET PER ANNUM.

**. Thin Paper Edition** for the People :—

SUBSCRN. PRICE : YEARLY RS. 4 ; HALF-YEARLY RS. 2-2.

SINGLE COPY, CURRENT NO. 5½ AS. ; BACK NOS. 6 AS. EACH.

ENGLISH & FOREIGN SUBSCRIPTION 5*s.* 6*d.* NET PER ANNUM.

**If strictly Prepaid** at the commencement of the term, (*i. e.*, in May of each year) 8 As. discount, off the annual rate, and 4 As. off the half-yearly rate.

Subscriptions entered to begin with only April or May of each year. Enrolled Subscribers may not withdraw except at the end of the year.

☞ To regular annual subscribers 2 months' grace is allowed for the prepayment of subscription, and in the case of regular half-yearly subscribers 3 weeks' time, within which all subscriptions should be paid to entitle them to the discounts allowed.

Subscriptions cannot be closed in the middle of a *Volume*, though regular subscribers may elect to pay their subscriptions in half-yearly instalments. *All notices for discontinuance are to be given in the beginning of the new year; i. e., in April or May ; for otherwise one should have to pay for the whole of the current volume.* Outstanding subscriptions are often realised by V. P. P. to prevent accumulation of arrears.

In all business correspondence, Subscribers are requested to quote their register number found on the wrapper, as it would ensure prompt attention and [sp]are vexatious delay and needless correspondence.

## விவேகசிந்தாமணி சந்தாவிவரம்.

தளமான காகிதப்பதிப்பு :—அத்தியக்ஷர்கள், ரீடிங்ரூம்கள், புத்தகசாலைகள் முதலான ஸ்தாபனங்களுக்கு உபயோகமானது. ☞ வருஷ சந்தா குறைந்தது ரூ 5. தனிப்பிரதி 7½ அணா. பழைய பிரதி 8 அணா.

லேசானகாகிதப்பதிப்பு :—சாதாரணமாய் எல்லா ஜனங்களுக்கும் உபயோகமானது.

வருஷசந்தா ரூ 4. 6-மாசத்துக்கு ரூ 2-2.
தனிப்பிரதி 5½ அணா. பழைய பிரதி 6 அணா.

வருஷாரம்பத்திலே (அதாவது மேமாசத்தில்) தவறுமல் கட்டினால் வருஷசந்தாவில் 8 அணாவும், 6-மாச சந்தாவில் 4 அணாவும் தள்ளிக்கொடுக்கப்படும்.

ஏப்பிரல் அல்லது மேமாதம் துவக்கியே சந்தாக்கணக்கு வைக்கப்படும். ரிஜிஸ்தரான சந்தாதாரர்கள் வருஷமுடிவிலன்றி மற்றபடி சந்தாவை நிறுத்துதல் கூடாது.

☞ வருஷக்கணக்காக ஒழுங்காய்ச் சந்தாசெலுத்திவருகிறவர்களுக்கு இரண்டு மாசத்தவணையும், 6-மாசக்கணக்காக ஒழுங்காய்ச்சந்தா செலுத்திவருகிறவர்களுக்கு மூன்று வாரத்தவணையும் கொடுக்கப்படும். அதற்குள் சந்தாவை முன்பணமாகச் செலுத்துகிறவர்களுக்கே மேற்கண்ட தள்ளுபடி செய்துகொடுக்கப்படும்.

பத்திரிகையை வருஷமத்தியில் நிறுத்தக்கூடாது. நிறுத்தவிரும்புகிறவர்கள் வருஷாரம்பத்தில் அதாவது ஏப்பிரல் அல்லது மே மாசத்திலே நோட்டீஸ் கொடுக்கவேண்டும் ; அப்படிக்கின்றி மத்தியில் நிறுத்தினால் அந்தவருஷ முழுவதற்குமுள்ள சந்தாவைச் செலுத்திவிடவேண்டும். சந்தாபாக்கிகள் V. P. P. மூலமாக வசூல்செய்யப்படும்.

கையொப்பக்காரர்கள் ஆபீசுக்குக் கடிதமெழுதும்போதெல்லாம் அவர்கள் ரிஜிஸ்தர் நம்பரைக் குறிப்பிட்டெழுதவேண்டும். அப்படிச்செய்வதால் அவர்கள் எழுதும் கடிதம் உடனே கவனிக்கப்படுவதன்றி அதிக தாமதத்துக்கும் வீண் கடிதப்போக்குவரவுக்கும் இடமிராது.

MALABAR AND ITS PEOPLE.

## மலையாளமும் மலையாளிகளும்.

II.

மலையாளதேசத்தாருக்கு முக்கியமான பண்டிகைகள் இரண்டு. ஒன்று விஷு, மற்றொன்று ஓணம். விஷுவாவது வருஷப்பிறப்பு. இது மேஷசங்கிரமணகாலம். இத்தினத்திலிவர்கள் ஆபாலவிருத்தம் அதிகாலையில் சூரியோதயத்துக்கு முன்னமே துயிலுணர்ந்தெழுந்து தீபம் ஏற்றி அதற்கு முன்னமே ஜோடனை செய்து வைத்துள்ள அணிகலம் கண்ணுடி நிறை நாழி முதலான மங்களப்பொருள்களைக் காண்பார்கள். பின்னர் அத்தினம் பகலில் பஞ்சபக்ஷ்ய பரமான்னங்களோடு பந்துமித்திரர்களை வைத்துக்கொண்டு மகிழ்வாகவுண்டு அதன்பின் விளையாட்டு விநோதங்களில் பொழுது போக்குவார்கள். வருஷத்தின் முதற்றினமாகிய இத்தினத்தில் ஒருவர் அனுபவிக்கப்பெற்றதையேயன்றி வருஷம் முழுதும் அனுபவிப்பார்களென்பது இவரது கொள்கையாதலின் இத்தினத்தை நற்பொருள்களைப் பார்ப்பதிலும் நன்றாய் உண்டுடுத்து விநோதிப்பதிலும் போக்குவார்கள்.

ஓணமென்பது ஆவணி மாதத்தில் திருவோண நக்ஷத்திரத்திற் கொண்டாடும் பண்டிகை. இது இத்தேசத்தாருக்கு மற்றபண்டிகையாவினும் பிரியமானது. இப்பண்டிகைக்குப் பத்துப்பதினைந்து நாளைக்கு முன்னமே இதன் ஆர்ப்பாடம் கிளம்பி பண்டிகையான பின் பதினைந்து நாள்வரையிற் செல்லும் அவ்வார்ப்பாடம் அடங்க. பையல்கள் எங்கே பார்த்தாலும் வில்லும் கையுமாய் அடித்துத் திரிவார்கள். இவ்வில் எய்யும் கருவிபோலிருப்பினும் எய்யும் கருவியன்று, ஒருவிதமான வாச்சியம். இது ஓர் மூங்கிற் சிம்பை வில்லின் ஆகாரமாக வளைத்து நாணுக்குப்பதிலாக சன்னமான கம்பிபோன்ற மூங்கிற்கதிரொன்றை மாட்டி விறைப்பாகத் தொடுத்திருப்பது. இவ்வில்லை இடதுகையினால் மூங்கில் நாணிமேலாகப் பிட்டில் பிடிப்பதுபோல மார்போடு சார்த்திப்பிடித்து வலதுகையில் பிடித்த ஒருமணிக்குச்சியினால் மூங்கில் நாணிமீது இதமாக அடிக்கக் கணகணவென்று மணியொலிபோல ஓசையுண்டாகும். இளைஞர்கள் இவ்வில்லில் கொட்டித்திரிதலன்றி ஆட்டக்களமென்று ஒருவகையான விளையாட்டும் இக்காலத்தில் விளையாடுவார்கள். இவ்வாட்டம் மற்றக்காலங்களில் ஆடப்படுவதில்லை. இவ்விளையாட்டு மிக்க வேடிக்கையும் வேகமும் உள்ளது. நான்கு கஜம் குறுக்களவுள்ள ஓர்வட்டத்தில் இரண்டு முதல் பத்துப்பதினைந்துபேர் வரையில் நிற்க அவ்வட்டத்தின் வெளியே ஒருவர் அல்லது இருவர் நின்று உள்ளிருப்பவர்களை வெளியே இழுத்து விடுதலாம். இது சுலபமான காரியமன்று, நிரம்பக் கஷ்டமானது. தேகபலமும் அடியை லக்ஷியம் பண்ணுமல் பொறுக்கும் திறமும் விசேஷமாகப் பெற்றிருந்தாலன்றிச் சாத்தியமாகாது. வட்டத்தினுள்ளிருக்கும் ஒவ்வொருவனுக்கும் வட்டத்தின் வெளியே நிற்பவர் உள்ளே கால்வைப்பினும் வைக்க முயலினும் கைகூசாமல் பளீர்பளீரென்று அடிக்கப் பாத்தியதையுண்டு. ஆதலின் ஒவ்வொருதாமும் வெளியில் உள்ளவன் எவ்வளவோ அடி பொறுத்தல் வேண்டிவரும். இவ்வடிகளையும் ஆரவாரத்தையும் பார்க்க வெகு பயங்கரமாயிருக்கும். இதுவும் அநாரியமான காட்டுமாராண்டிவழக்கங்களில் அழியாது நிலைநிற்கும் ஒன்றென்று தோன்றும். இப்பண்டிகை நமக்குள் தீபாவளி பண்டிகை ஆசரிக்கப்படுவது போலவே இவர்களுக்குள் ஆசரிக்கப்படுகின்றது. பண்டிகை தினத்தில் ஸ்திரீ புருஷர்கள் எண்ணெய்தேய்த்து மூழ்கிப் பாவுமுண்டுகள் முதலான உயர்ந்த கோடிவஸ்திரங்கள் தரித்து அதிர்வெடி முழக்கி வெகு கொண்டாட்டம் கொள்வார்கள். இத்தினத்தில் பந்து மித்திரர்கள் ஒருவர்க்கொருவர் கோடிவஸ்திரங்களேயன்றி அவரவர் நிலைமைக்குத் தக்கப்படிப் பிற பொருள்களும் வெகுமதியாகப் பரஸ்பரம் கொடுத்துப் பெற்றுக்கொள்ளல் வழக்கம். இத்

தேசத்தில், இமச்சேது பரியந்தம் இவ்விந்தியாவெங்கும் கொண்டாடப்படும் தீபாவளிப் பண்டிகையாவது, பொங்கல் பண்டிகையாவது, பிராமணர்களுக்குள்ளே ஆசரிக்கப்படும் உபாகர்மமாவது, கிரஹண ஸ்நானமாவது ஒன்றையும் கா[illegible]ணும்.

மே[illegible] கூறியவாறு நம்பூரிகளென்னும் பிராமணர்களையும் நாயன்மாரென்னும் சூத்திரர்களையும் தவிர தொழிலாளிகளாக அநேக ஜாதிகள் உள்ளார். இவர்களில் முக்கியமானவர்கள் தீயார், கொல்லர், தட்டார், தச்சர், கணியார் முதலானவர்கள்; இவர்களெல்லோரும் தீண்டாப்பேர்கள். இத்தேசத்தில் தீண்டல் தோஷம் மிகப்பெரியதோஷம் ஆகும். செறுமார், புலையர், பறையர் முதலான ஜனங்களைக் கண்டு வெகுதூரம் விலகுதலன்றிப் பரதேசங்களில் தீண்டலில்லாத சாணூர் தச்சர் கருமார் முதலான ஜாதியார்களைக்கூட அணுகவொட்டார்கள். தீண்டற்பட்டவனை மேலேபட்டபோதன்றியும் ஒருபொருளைச்சேர்ந்து தொட்டபோதும் தீண்டல் அநுஷ்டிப்பார்கள். இவ்வாசாரம் பிராமணர்களுக்குள்ளே யன்றி சூத்திரர்களுள்ளும் உண்டு. ஆதலின் இத்தேசத்தில் தீண்டல் படுதலும் குளித்தலும் மிகவும் அதிகம். ஸ்திரீ புருஷர்கள் வைதிகர் அல்லாதவர்கூட ஒருதடவையேனும் தினம் தினம் தலைமுழுகி ஸ்நானம் செய்தல் இன்றியமையாது. கொஞ்சம் வைதிகர்களாயிருப்பவர்களுக்குக் காலையில் ஸ்நாநனுஷ்டானம வேண்டிவரும்மாதலின் அப்போதும், பின்பு வேலை வெட்டிகளில் வெளியிடங்களிற் சென்ற காலையில் தீண்டல் நேரிடல் சித்தமாதலின் மாலையினும் தப்பாமல் ஸ்நானம் செய்வார்கள். தீயர்கள் என்பவர்கள் [illegible]தேசங்களில் சாணுருக்குச் சமானமானவர். இவர்களுக்கு முக்கியமான தொழில் கள்ளிறக்குதலும், மரமேறுதலும் ஆயினும் அநேகர் கிருஷித்தொழிலிலும் முயன்றிருப்பார்கள். இத்தீயர்களில் அநேகர் இங்கிலீஷ் கற்று சர்க்கார் வேலைகளில் பிரவேசித்திருப்பவர்களும் உண்டு. இவர்கள் தீண்டாப்பேராகவும் ஈனஜாதியாகவும் கருதப்படினும் உருவிலாவது புத்தியிலாவது நாயன்மார்களுக்கு எவ்வளவும் குறைந்தவர்களல்லர். இவர்கள் தவிர பொன்வேலைசெய்யும் தட்டார்களையும் மரத்தொழில்செய்யும் தச்சர்களையும், சோதிடம் சொல்லும் கணிகர்களையும் ஈனஜாதியாராகவும் தீண்டாப்பேர்களாகவும் கருதியிருப்பதன் காரணம் யாதோ விளங்கினதில்லை. இவர்கள் ஒருவேளை நாயன்மாருக்கு முன்னம் சென்று குடியேறி யிருந்து பின்பு அந்நாயன்மார்களால் ஜயிக்கப்பட்டார்கள் போலும் இச்சந்தர்ப்பத்தில் இத்தேசத்தாருடைய விசித்திர வழக்கங்களையும் ஆசாரங்களையும் தெரிவிப்பதற்கு யாம் பார்வையிட்ட ரீஸ் துரையவர்களெழுதிய மகம்மதீய சரித்திரத்தில் கண்ட ஒரு புதுமையான விஷயத்தை இங்கு காணலாகும். சாமுரீன் (தாமூதிரி) என்னும் அரசர்கள் நியமித்த சிலகாலம் ஆண்டபின்பு தமக்குப் பின்வருவார்கள் அந்தஸ்தானத்தை அடையும்பொருட்டு மந்திரவித்தான அநேக சடங்குகளோடு தம்கழுத்தைத் தாமே அரிந்து கொள்ளக் கட்டாயப்படுத்துதல் வழக்கமென்று பிரயாணிகள் கூறியிருப்பதாக இச்சரித்திரக்காரர் கூறுகின்றனர். இது என்ன புதுமை! எங்குமில்லாத கொடுமை! மலையாளம் என்னும் தரும ராச்சியத்தில் இவ்விதக் கொரோமும் ஆசரிக்கப்படுமோ! ஆயினும் இத்தேசத்தாருக்குள்ளே அநேக புதுமையான வழக்கங்கள் உண்டென்றுமட்டும் சொல்லலாகும். இவர்கள் இவ்வாறு தீண்டத்தகுவாரையும் தீண்டாப்பெயர்களாகப் பாவித்துத் தீட்டு விஷயத்தில் இவ்வளவு நிஷ்கர்ஷையுள்ளவர்களாயினும் இத்தீயர்களோ, அல்லது இவரினும் இழிந்த செருமர், புலையர்தாமோ, தம்மதம் விடுத்து மகம்மதீயத்திலோ அல்லது கிறிஸ்தவமதத்திலோ சேர்ந்து விடுவாராயின் அவர்களுக்கு அப்போதே தூரவிலகவேணுமென்னும் நிஷ்கர்ஷை போய்விட்டது. அவர்கள் கோயில் குளங்களை அடுத்துவரினும் குற்றமில்லை. அன்றியும் பரதேசப்பறையர்க

ளாகிய குதிரைக் காஸ்தாரிகள் எவ்வளவு பேரோ இருக்கிறார்கள் அவர்களுக்கும் இந்தத் தீட்டு நிபந்தனை ஒன்றுமில்லை.

இனிக் கீழ்நாடுகளிலிருந்து வந்து இந்நாட்டில் குடியேறியிருக்கும் பட்டர்கள் என்னும் தமிழ்ப் பிராமணர்களைப்பற்றிச் சிறிது சொல்லாமல் விடுவது உசிதமன்று. இவர்கள் பாலக்காட்டுப்பக்கங்களில் கிராமங்கள் முழுதும் தாங்களேயாய் மிகுந்து குடியேறியிருப்பதன்றி மற்ற விடங்களிலும் முக்கியமாய்ப் பட்டணவாசங்களிலும் விசேஷமாகக் காணப்படுவார்கள். இவர்களில் சிலர் உத்தியோகத்திலும், சிலர் வர்த்தகங்களிலும், சிலர் பற்பல சிறுதொழில்களும் அமர்ந்திருப்பார்கள். இவர்கள் நெடுநாளாக இத்தேசத்தாரோடு பழகி வருதலின் நடையுடை உண்டிகளிலும் சிறிது பாஷையினும் கூட இத்தேசத்தவரை ஒத்திருப்பார்கள். இவர்களை இத்தேசத்தார் பரதேசத்தவரென்று அசூயையும் பொறாமையும் கொண்டு நிந்தித்து வெறுப்பினும் இவர்களுக்கு இங்கு விசேஷ செல்வாக்கும் கௌரவமுமுண்டு. இவர்கள் நம்பூரிகளைப்போல சர்க்கார் உத்தியோகங்களில் பிரவேசியாமலிருந்தால் இவர்கள்மேல் இவ்வளவு அசூயையும் பொறாமையும் இரா. நாயன்மார் எவ்வளவு படித்து முன்னுக்குவந்தும் இவர்களை வெல்லுதற்கில்லை. இவ்விரு திறத்தாருடைய புத்தி விசேஷங்களை விளக்குவதற்கு ஒரு சிறுகதையுண்டு. ஒரூரில் ஒரு இராத்திரி ஒருதிண்ணையில் பட்டர் ஒருவன் படுத்திருந்தனன். அப்போது ஒரு மலையாள நாயர் தனக்கு வேறு படுக்க இடம் கிடையாமையால் அங்குவந்து அப்பிராமணனை எழுப்பும் பொருட்டொரு பிடிமணலை அவ்விடத்திற்றூவி அதைத்தன் மந்திரசக்தியால் சிற்றெறும்பாக மாறும்படிச் செய்தனன். எறும்பின் கடியால் நித்திரை பங்கமாகி எழுந்திருந்த பிராமணன் அங்குவிட்டு உதறிச் சுருட்டிக்கொண்டு அப்பால் சென்றனன். அவன் போனதும் நாயர் படுக்கையை விரித்துச் சுகமாக நித்திரைபோனான். சற்று நேரத்துக்கெல்லாம் அப்பிராமணன் அங்குவந்து பார்த்து உண்மை இன்னதென்று தெரிந்துகொண்டு மனத்திற் குரோதம்கொண்டுடனே சமீபத்தில் இருந்த மாமரத்தில் தொங்கிக்கொண்டிருந்து முயிற்றுக்கூடுகளில் ஒன்றை அப்படியே கொண்டுவந்துநாயர்மீது உதறிவிட்டனன். கொள்ளிக்கட்டைபோல் சுறீரென்று கடித்துப்பற்றிக்கொண்டு தேள்விஷம்போலக் கடுக்கும் அவ்வெறும்புகூட்டடன் விழுந்திடிக்கவே அந்நாயர் அலறிப்புடைத்துக்கொண்டு எழுந்து அப்புறம் ஓடவேண்டியதாயிற்று. இக்கதையால் மலையாளி மந்திரத்தினால் ஜயித்தால் பட்டர் தந்திரத்தினால் ஜயிப்பனென்றும் பட்டரைவெல்ல மலையாளியால் இல்லையென்றும் காட்டப்படுகின்றது.

இந்துக்களாகிய அந்த ஜனங்களைத் தவிர இத்தேயத்தில் மகம்மதீயர்களும் அநேகர் இருக்கிறார்கள். இவர்களுக்கு மாப்பிள்ளை யென்று பெயர். இப்பெயருக்கு 'மஹாபிள்ளை' அதாவது பெருமைபொருந்திய ஜனங்கள் என்று பொருள் என்பர்: இவர்கள் ஆதியில் அரேபியா தேசத்திலிருந்துவந்து குடியேறினவர்கள். இவர்களில் பெரும்பான்மையோர் வர்த்தகங்களிலும் சிலர் கிருஷித்தொழிலிலும் அமர்ந்திருப்பார்கள். இவர்கள் பேசும்பாஷை மலையாளமே. சுபாவத்தில் மிக்க கொடுமையுள்ளவர்களும் மதவெறியாலே மூர்க்கமான செய்கைகளைச்செய்பவர்களும் ஆவர். இவர்களும் நம்பூரிமார்களைப்போல்வே இங்கிலீஷ் விசேஷமாய்க் கற்பதில்லை. அப்பாஷையைக் கற்பது தம் மதத்துக்கு விரோதமானது என்று கருதுவார்கள். மிக்க பலாட்டியமும் துஷ்டசுபாவமுமுடையவர்களாய் அடிக்கடி கலகித்தெழுவார்கள். இவர்களுடைய கொட்டத்தை அடக்குவதற்காக இவர்களுக்காக மாப்பிளைச் சட்டமென்று பிரத்தியேகமாக ஏற்படுத்தியிருக்கிறார்கள். ஆதலின் முன்போல இவர்கள் அவ்வளவு அக்கிரமம்செய்ய இடமில்லை,

இனி இத்தேசத்தாருடைய மதக்கொள்கைகளையும், கோயில் உற்சவம் முதலானவற்றையும் பற்றிச் சிறிது சொல்லுவோம்.

இத்தேசத்தில் சைவவைஷ்ணவ மதபேதங்களாவது மதவைஷம்யங்களாவது எள்ளளவேனும் இல்லை. விஷ்ணுவாலயங்களிலும் சிவாலயங்களிற்போலவே விபூதிதரித்த நம்பூரிகளாலேயே பூஜை நைவேத்தியங்கள் செய்யப்படும். திருமண்ணாவது ஸ்ரீசூரணமாவது தரிக்கும் மலையாளிகள் இல்லவேயில்லை. எல்லோரும் ஒருங்கே விபூதிதரிப்பவர்களேயாவர். சிவபுராணம் விஷ்ணுபுராணம் இரண்டையும் ஒருங்கே படித்துக் கனப்படுத்துவார்கள். சிவதரிசனம் விஷ்ணுதரிசனம் இரண்டும் ஒருங்கே செய்வார்கள். பஞ்சாக்ஷரம் அஷ்டாக்ஷரம் இரண்டையும் ஒருங்கே அபிமானித்து உச்சரிப்பார்கள். ஆதலின் இவரது மதம் ஸ்மார்த்த வைதிகம் அல்லது அத்வைதம் என்றே கொள்ளற்பாலது. நிர்க்குணப்பிரமத்தின் சுபாவத்தை இவர்களில் அநேகர் பிரத்தியக்ஷாநுபவமாக அறிந்தவர்களாயினும் சகுணோபாசனையிலும் மிகுந்த சிரத்தையுள்ளவர், ராமகிருஷ்ணாதி அவதாரங்கள் இவர்களுக்கு அதிப்பிரியமாகும். விஷ்ணுவை அநேகமாக அவதாரங்களாலேயே பூஜிப்பார்கள். ஆனால் சிவனை லிங்கஸ்வரூபமாகவும் விநாயகமூர்த்தியாகவுமன்றி வேறு சுப்பிரமணியாதி மூர்த்தங்களில் ஆராதிக்கக் காணோம். துர்க்கையை பகவதியென்னும் பெயரால் கோயில்கள்தோறும் பிரதிஷ்டித்துப் பூசிப்பார்கள்.

இத்தேசத்தில் பரதேசங்களைப்போல ஆலயங்களில் அநேக மூர்த்திகளாவது அநேக விக்ரகங்களாவது இல்லை. ஒவ்வொரு கோயிலிலும் ஒன்று, சிவபெருமான், ஒன்று பகவதி, ஒன்று கிருஷ்ணன், ராமன் என்றிப்படித் தனித்தனியே ஒரே மூர்த்தமாயிருக்கும். விநாயகமூர்த்தம் மாத்திரம் எங்கும் உள்ளது. ஆதலின் இத்தேயங்களில், பரிவாரதேவதா விக்ரகங்களேனும், பக்தவிக்ரகங்களேனும் கிடையா. ஆலயங்கள் பெரும்பாலும் உருவிற் சிறியவாயினும் வெகு நிர்மலமாயிருக்கும். மற்ற விடங்களில் தீண்டல் எச்சில்படுகிற நாட்டில் ஆலயங்களில் அத்தோஷங்கள் நெருங்கலாவனவோ? இவ்வாலயங்களில் சீவலைசெய்யும் மேளகாரர், மாலைதொடுப்பவர் கூட வெகு ஆசாரநியமத்துடன் இருப்பார்கள். பூஜைசெய்யும் அருச்சகனைப்பற்றிச் சொல்ல வேண்டியதில்லை. ஆயினும் வண்ணானுடை ஆசாரமாகக்கொள்ளப்படுதலால் சாமிக்குச் சாத்துவதும் அருச்சகன் கட்டிக்கொள்வதும் அவ்வுடையேயாகும்.

இத்தேயத்தில் மதுமாம்சபக்ஷணிகள் பரதேசத்திலும் எவ்வளவோ தொகையிற் குறைந்தவர்களென்றே சொல்லவேண்டும். மேலே கூறிய மேளகாரர் முதலான அம்பலவாசிகளைத் தவிர நாயகர்முதலிய வேறு இனங்களுக்குள்ளேயும் சூத்திரஜாதியிலும்கூட அவற்றை முற்றிலும் துறந்திருப்பார்கள். இத்தேசத்து ராஜவம்சங்களிலோ இக்குற்றம்இல்லவேயில்லை. இவர்கள் அநேகமாக பிராமணர்களுக்குப் பிறந்து பிராமண சகவாசம் விசேஷமாயுடையாராய் பிராமணர்களை நன்குமதிப்பவர்களாயிருப்பார்கள். மலையாளத்தில் மேற்குலமென்பதும் கீழ்க்குலமென்பதும் மற்றவிடங்களிற்போலவே பிராமணாசாரங்களை அநுஷ்டித்திருத்தலும் அகன்றிருத்தலுமேயாம்.

இத்தேசத்தில் பரதேசங்களைப்போல அதிலும் ஈழநாடு தொண்டநாடுகளைப்போல உத்ஸவங்கள் கொண்டாடப்படுவதில்லை. ஆசாத்துள்ளகோயில்களுக்கு வருஷத்தில் ஒருவிசை உத்ஸவம்நடக்குமாயினும் அவ்வுற்சவங்களில் பிராமணபோஜனமும் பூஜையுமே சிறந்திருக்குமன்றி கொட்டகை முதலிய ஜோடனைகளாவது வாகனங்கள் இரதங்கள் மேளதாளங்கள் வாணமத்தாப்புக்களின் விசேஷங்கள் ஒன்றும் இரா. யானையின்மீது உற்சவவிக்கிரகத்தையேற்றி அருச்சகன் அதனைப் பின்னிருந்துதாங்கிவர வெளிப்பிராகாரத்தினுள்ளே

கோயிலைச்சுற்றி செண்டைகொட்டும் குழ லூதும் காதைப்பொளிய வலம்வருதலே சுவாமிக்கு ஜோடனைபண்ணிச் சிங்காரிப்பதற்கு இத்தேயத்தில் புஷ்பங்களும் விசேஷமாக அகப்படா. செம்பருத்தியும், தெச்சியும், துளசியுமன்றி வேறுமல்லிகை, செவ்வந்தி முதலிய புஷ்பங்கள்கிடையா. கிடைத்தாலும் அலங்கரிக்கத்தெரியாது.

இனி இவர்களது பாஷையைப்பற்றிச் சிறிது சொல்லுவோம் இது தமிழினின்று சிறிது வேறுபட்டுச் சமஸ்கிருதமொழிகள் விசேஷமாக விரவப்பெற்றிருக்கும். விகுதிகள் குன்றி மூவிடம் ஐம்பால்களுக்கும் ஒரே ரூபத்தைக் கொண்டிருக்கும். இது கேவலம் குழந்தைகள் பேசும் இலக்கணவழுவாகிய பாஷைபோலத் தோன்றும். இப்பாஷைக்குத் தமிழிலக்கணத்தையொட்டி சம்ஸ்கிருதநாமங்களை யேற்படுத்தி நூதனமாக கார்த்வெயிட்துரை, குண்டர்ட் துரை இவர்களால் செய்யப்பட்ட இலக்கணமன்றி சுதேசிகளால் செய்யப்பட்ட பிராசீனமான இலக்கணங்கள் ஒன்றையுங்காணேம். தமிழ்ப்பாஷைக்கு அகத்தியம், தொல்காப்பியம், கல்லாடம், வீரசோழியம், நன்னூல், இலக்கணக்கொத்து, இலக்கணச்சூருவளி என்று எவ்வளவோ எண்ணிறந்த இலக்கண நூல்கள் ஏற்பட்டிருப்ப இப்பாஷைக்கு இலக்கணநூல் ஒன்றேனும் ஏற்படாமற்போனது எவ்வளவு ஆச்சரியம். இவ்விதமான பாஷைகளைக்குறித்தே பரஞ்சோதிமுனிவர் தமிழின் பெருமையைக் கூறுமிடத்து,

“கண்ணுதற்பெருங்கடவுளும் கழகமோடமர்ந்து
பண்ணுறத்தெரிந்தாய்ந் தவிப்பசுந் தமிழேனை
மண்ணிடைச் சிலஇலக்கணவரம்பிலாமொழி
போல்
எண்ணிடைப்படக்கிடந்ததா வெண்ணவும்
படுமோ?”

என்று கூறியிருக்கின்றனர். இப்பாஷைக்கு சம்ஸ்கிருத பாஷையின் சம்பந்தமில்லாவிடின் எள்ளளவேனும் சிறப்படையாது. இந்தப் பாஷையில் உள்ள காவியங்கள் பெரியவையோ சிறியவையோ உயர்ந்தவைகளோ தாழ்ந்தவைகளோ எல்லாம் சம்ஸ்கிருத பதங்களும் சம்ஸ்கிருத சந்திகளும் நிறைந்திருக்கும். சிற்சிலவிடங்களில் முழுதும் சம்ஸ்கிருதமாகவே யிருக்கும். பூவோடுசேர்ந்த நாரும் மணம்பெற்றதுபோல இந்த சம்ஸ்கிருத சம்பந்தத்தால் மாத்திரமே இப்பாஷை பாஷையென்னும் பெயரும்பெருமையும் பெற்றிருக்கின்றது. ஆரிய சம்பந்தத்தாலே இதர ஜாதியார் நாகரிகமும் மேன்மையும்பெற்றிருப்பதுபோல சம்ஸ்கிருத சம்பந்தத்தாலே தமிழொழிந்த மற்றத் தென்தேசத்துப் பாஷைகள் சிறப்புற்றிருக்கின்றன.

---

## A PICTURE OF SAKUNTALA IN A CRITICAL MOMENT.

## “ஆபத்து சம்பவிக்கும் தருணத்தில் சகுந்தலை யிருந்தவகை.”

---

கடந்த பிப்ரவரி மாசத்தில் சென்னைமா நகரத்தில் காண்பிக்கப்பட்ட சித்திரப்பொருட்காட்சியில் வைக்கப்பட்ட படங்களில் ஒன்று மேற்குறித்த சித்திரபடம். அது பிரசித்திபெற்ற ராஜா ரவிவர்மா அவர்களால் எழுதப்பட்ட படம். சென்னை இராஜதானியிலுள்ளோருக்கு ரவிவர்மா அவர்கள் இன்னாரென்று நாம் சொல்லவேண்டுவதில்லை. பிரதி ஒவ்வொரு கிருகத்திலும் அவர் எழுதிய படங்களைக் காண்கின்றோம். சித்திரபடங்களை எழுதுவதில் அவர் வல்லவரேயாயினும் சமஸ்கிருத பாஷையில் கிடந்துள்ள இதிகாஸ, புராண, நாடக, காவியாதிகள் அவர் எழுதுவதற்குத் தகுந்த கதைகளையும், சரித்திரங்களையும், மானிட வியாபாரங்களையும் தந்திராவிட்டால் அவருடைய வல்லமை இவ்வளவு மேன்மை பெற்றிருக்கமாட்டாது. அதினால் அவருடைய வல்லமையை நாம் குறைத்துப்பேசியதாக எண்ணப்படாது. சிற்ஷ்டி உற்பத்தியாக்குகிற

வஸ்துக்களுக்கு உபாதான காரணமாயிருப்ப
வன் கவிஞ்ஞன். கவிஞ்ஞன் தந்த அபிப்பிரா
யத்தையே சிற்பிகண்ணுக்கும் அதின்மூலமாய்
மனதுக்கும் விஷயமாகிறபடங்களையெழுதுகின்
றான். ஆனால் சித்திரத்தினால் விளக்கக்கூடிய
அளவு கவியின் போதனையினால் விளக்கமுடியா
தென்பதுயாவரும் அறிந்த விஷயம். இதினால்
கவியின் முயற்சியை சிற்பி சம்பூரணம் செய்ய
வந்தவனே யொழிய வேறல்ல. சிற்பத்திற்கு
ஆதாரமாகிய காவியம் பழுதாமானால் சிற்பம்
மேன்மை பெறமாட்டாது. சந்தனமரம் சிற்
றுளிவேலைக் குதவுமேயொழிய முருங்கைமரம்
உதவாது. ரவிவர்மா அவர்கள் தம்முடைய
பிரசித்தி பெற்ற படங்களுக்கு விஷயங்களை
சாகுந்தல நாடகத்தினின்று அடைந்ததற்குக்
காரணம் இதுவே. காளிதாஸனைப்போல்
மானிட சுபாவத்தை அறிந்த கவி எவன் இருக்
கின்றான். மேற்கண்ட நாடகத்தினின்றும்
விஷயங்களை வாங்கி இதுவரையிலுமே சுமார்
ஐந்து ஆறு படங்களை எழுதியிருக்கின்றார்.
"சகுந்தலை செடிகளுக்கு தண்ணீர் ஊற்றும்
வகை," "சகுந்தலை துஷியந்தனுக்குக்கடிதம்
எழுதுகை," "சகுந்தலை தான் வளர்த்த மானி
டம் விடைபெற்று கணவன் வீட்டுக்குச் செல்
லுகை," "பர்த்தாவினால் விடப்பட்ட சகுந்த
லையை மேனகை எடுத்துக்கொண்டு ஆகாச
மார்க்கமாய்ச் செல்லுகை," "பரதன் சிங்கத்
தின் குட்டியை எடுத்துக்கொண்டு செல்
லுகை" ஆகிய இவை அவரால் ஏற்கனவே
சித்திரிக்கப்பட்டிருக்கின்றன. வாசிப்போர்
அவைகளைப் பார்த்திருப்பார்களாகையால்
அவைகளைப்பற்றி நாம் எழுதவேண்டுவதில்லை.
அவற்றின் கதா சந்தர்ப்பமும், கோர்த்தியும் எல்
லோரும் அறிந்திருப்பார்கள். நூதனமாய்
எழுதப்பட்ட படத்தின் கதா சந்தர்ப்பமும்,
அமைப்பும் இங்கு விளக்கிகாட்டப்படும்.
சாகுந்தல நாடகத்திற்கு ஆதாரமாகிய பாரத
கதையில் துஷியந்தன் லோகாபவாதமில்லா
மல் சகுந்தலையை பரிக்கிரகிக்கும் பொருட்டு
சகுந்தலையை நிக்கிரகித்ததாகவும் பிறகுஆகாச
வாணியின் மொழியினைக்கேட்டு ஜனங்கள்
ராஜாவை சகுந்தலையை பரிகிரகிக்குமாறு
தூண்ட பரிகிரகித்தாரென்று சொல்லப்பட்டி
ருக்கிறதே யொழிய வாஸ்தவத்தில் சகுந்த
லையை துஷியந்தன் மறந்ததாகச் சொல்ல
வில்லை. முயற்சி செய்தலும், அதற்கு இடை
யூறு வருதலும், அவைகளை வென்று காரிய
சித்தி பெறுதலுமே நாடகத்தினமைப்பான
மையால், அக்கதையை நாடகமாய் எழுதிய
காளிதாசன் துஷியந்தன் சகுந்தலையை வாஸ்
தவமாய் மறந்துபோனானென்றும் அவ்வாறு
மறப்பதற்கு தூர்வாஸமகரிஷியால் சகுந்தலைக்
குக் கிடைத்த சாபமே காரணமென்றும்
கதையை மாற்றிக்கொண்டார். தூர்வாஸரு
டைய சாபக்கிரமம் பாரதத்தில் கிடையாது.
இல்லாவிடினும் அவரை வரவழைத்துக்கொண்
டமையே நாடகத்துக்கு ரஸத்தைக் கொடுத்
தது. மலையிலுற்பத்தியாய் ஆழ்தரையிலோடி
ஸமுத்திர ஸங்கமமாகும் விரைவுடைய ஆறு
போல் ஓடுகின்ற பாரதத்திலுள்ள சகுந்தலை
கதையை காளிதாஸனென்கிற யந்திர சாஸ்
திர விற்பன்னன், தலைநதியாகிய கதை முதலி
லேயே, தூர்வாசன்வருகை யென்கிற அணை
போட்டுத் திருப்பித் தமது புத்தியென்கிற
செழிப்பான நிலத்தில் பாய்ச்சி, ஜனங்கள் சந்
தோஷமாய் அனுபவிக்குமாறு, தமது சிருங்
கார ரஸம்பொருந்திய நாடகமென்கிற சிருங்
கார வனத்தை உண்டாக்கிவிட்டார். ஆகையி
னால் இந்நாடகத்திற்கு தூர்வாசர் வருகை பிர
தானமானபாகமாய் ஏற்பட்டது. அந்த சந்தர்ப்
பம் யாதெனில், துஷியந்தன் சகுந்தலையை
கெந்தர்வ விவாகம் செய்துகொண்டபிறகு யாக
ரக்ஷணையின் பொருட்டு சகுந்தலையை விட்டுப்
பிரிந்துபோகவும் சகுந்தலை கணவன் பிரிவாற்
றாமல் சிந்தைக்குள்ளாயினள். ராஜன்
ரிஷிகளுடைய யாகங்களை நிறைவேற்றி தனது
நகரம்போய்ச் சேர்ந்தனன். தன் அரண்மனை
ஸ்திரீகளுடைய மோகத்தில் மூழ்கி கண்வா
சிரமத்தின் விருத்தாந்தத்தை ராஜன் மறந்து
போவானோவென்ற சிந்தை சகுந்தலையின்

தோழிகளுடைய மனதில் உதித்தது. சிந்தையென்கிற கடலில் முழுகிக்கிடக்கும் சகுந்தலையை தோழிகள் தொந்திரவுப் படுத்துவதில்லை. புஷ்பம் கொய்யப்போவது முதலான வேடிக்கையான தொழில் செய்யும்போதுகூட சகுந்தலையை தம்மோடு அழைத்துப்போவதில்லை. சிறிதுகாலம் அனுபவித்த கணவன் சுகத்தை அடிக்கடி ஞாபகத்துக்குக் கொண்டு வந்து ஆனந்த பரவசையாயிருப்பாள். சகுந்தலை அவ்வாறிருக்க ஒருநாள், தோழிகளாகிய அனசூயை, பிரியம்வதை, சகுந்தலையை ஆசிரமத்தில்விட்டு, பக்கத்திலுள்ள பூஞ்சோலையில் பூப்பறிக்கச்சென்றனர். அத்தருணத்தில் ஆசிரமபர்ணசாலைக்கருகில் "இதோ நான் வந்திருக்கின்றே" னென்று சத்தமுண்டாக அனசூயை "அதிதிகள்யாரோ வந்திருக்கிறாப்போல காண்கிறது" என்றாள். பிரியம்வதை "இருக்கிறாளே பர்ணசாலையில் சகுந்தலை" என்ன, அனசூயை "தேகத்தோடே யிருக்கிறாளன்றி மனசுடன்இல்லை" என்று பதிலளித்தாள். அதிதிகளுக்கு உபசரணை செய்யும்விஷயத்தில் சகுந்தலையை நம்பக்கூடாதென்ற எண்ணத்துடன் தோழிகளிருவரும் விரைவாய் நடந்து ஆசிரமத்தை நோக்கிச் செல்லுகிறார்கள். அவர்கள் போய்ச்சேரா முன்னமே "ஹா! அதிதியை அவமானம் செய்தவளே! எதிரில் நிற்கின்ற தபோதனனாகிய என்னைப் பாராமல் எவனை நினைத்துக்கொண்டு தியானம் பண்ணுகிறாயோ அவன், எவ்வளவு ஞாபகமூட்டப்பட்டாலும், முதலில் தான்செய்த உறுதி மொழி மறந்து உன்னை நினைத்துக்கொள்ளாமற் போகக்கடவன்" என்ற மொழி அவர்கள் காதில்விழ உடனே அனசூயை எவனோ பூஜார்கனான ரிஷியைக் கவனியாமல் சகுந்தலை சாபத்திற் குள்ளானாளென்று கண்டு கொண்டாள். சற்று உற்றுப்பார்க்க சாபம் கொடுத்தவர் கோபமே உருவெடுத்த துர்வாஸ மகரிஷியெனவும் தெரியவந்தது. இவ்வாறு தெரிந்துகொண்டு ரிஷியினிடஞ்சென்று தோழிகள் சாபானுக்கிரகம்பெற்று பர்ணசாலைக்குச் செல்லுகையில் அப்போது சகுந்தலையிருந்த நிலைமையைப் பிரியம்வதை அடியில் வருமாறு வர்ணிக்கிறாள். "அனசூயா! பாரடீ! அதோ! தோழி! இடது கையின் மீது முகத்தை நாட்டிக்கொண்டு எழுதப்பட்ட பொம்மையைப் போலவிருக்கிறாள். கணவன் மீது சிந்தையினால் தோழி இப்போது தன்னையே தான் அறியமாட்டாள். அதிதியின் சங்கதி சொல்லவேண்டுமோ."

மேற்சொல்லியவைகளால் சகுந்தலை துர்வாசர் வருவதற்கு முன்னால் இன்னவிதமாயிருந்திருப்பாளென்று யாவரும் தெரிந்துக் கொண்டிருக்கலாம். தோழிகள் பார்த்தபோதிருந்தவாறே, துர்வாசர் பார்த்தபோதும் இருந்திருக்கவேண்டும், அதற்குச்சற்றே முன்னரும் அவ்வாறே இருந்திருத்தல் வேண்டும். நிற்க, ரவிவர்மா அவர்கள் சித்திரித்து காட்சிச்சாலையில் வைத்திருந்த மேற்கண்ட படமானது துர்வாசர் சற்றே தூரத்தில் வந்துகொண்டிருக்கிறபோது சகுந்தலை யிருந்த வகையைக் குறிப்பிக்கிறது. படத்தில் வடபுரத்தில் மண்ணாலேயே நிறைந்த இரண்டு மூன்று சிறு குன்றுகளிருக்கின்றன. அக்குன்றுகளில் சில பாகம் சிறு செடிகளால் மூடப்பட்டும் சிலபாகம் அவ்வாறில்லாமலு மிருக்கின்றன. வடமேற்கு மூலையில் குன்றுகளுக்கு சற்று தூரத்தில் பர்ணசாலையிருக்கின்றது. அதின் ஒரு மூலையும் வாசற்படியி லொருபாகம் மாத்திரம் தெரிகின்றது. பர்ணசாலையைவிட்டு சற்று தூரத்தில் தென்திக்குநோக்கி துர்வாசர் வந்துக்கொண்டிருக்கிறார். அவர் வந்துக்கொண்டிருக்கிற இடத்திற்கு தென்கிழக்கில் சற்றே தூரத்தில் சமதரையில் கற்குண்டுகள் ஒருங்கு சேர்ந்து கிடக்கின்றன. அக்குண்டுகளுக்கு இடையிலும் சுற்றிலும் புஷ்பத்துடன் சில செடிகளிருக்கின்றன. ஒரு குன்றுக்கு அருகில் இளமையான பனமரமொன்று இருக்கின்றது. அம்மரத்தினடியில் இருக்கிற ஒரு கற்குண்டின் மீது உட்கார்ந்து இரண்டுகால்களையும் சற்றே தாழவிருக்கும் மற்றொரு கற்குண்டின்மீது

வை ;துக்கொண்டிருக்கிறாள். இரண்டு கைக ளையும் இரண்டு துடைகளின்மீது சோர விட் டிருக்கிறாள். கிழக்கு முகமாய் உட்கார்ந்து திருஷ்டியை நேரே கிழக்கு திக்கு நோக்கிச் செலுத்தியிருக்கிறாள். கையில் காப்பிற்கு பதில் புஷ்பஸர கங்கணங்க ளிருக்கின்றன. கழுத்தில் ரோஜா புஷ்பஹாரமொன்று இருக் கின்றது. காதில் இரண்டு புஷ்பக் கொத்து கள் தொங்குகின்றன. சகுந்தலைக்குப் பின் புறத்தில் இடது பக்கமாய் சற்றே தொலைவில் தூர்வாசர் வருகிறார். மூன்று நான்கு விஷ யங்களில் நாடகத்திற்கும் படத்திற்கும் வித்தி யாசம் காணப்படுகின்றன. நாடகத்தின்படி சகுந்தலை பர்ணசாலையிலிருந்தாள். படத்தில் பர்ணசாலைக்கு வெளியே வெகு தொலைவிலிருக் கிறாள். நாடகத்தில் தூர்வாசர் பர்ணசாலைக் குவந்து அதிதிவந்திருப்பதாக தெரிவித்துக் கொண்டார். படத்திலோ பர்ணசாலைக்கு முதலில்போய் அங்கு எவரையும் காணாமல் சகுந்தலை யிருக்கிற இடம் நோக்கி வருகிறார். நாடகத்தில் சகுந்தலை தன் முகத்தை தன் இடது கையின்மீது சாற்றியிருந்தாள் அதா வது கீழ்திருஷ்டி யுடையவளா யிருந்தாள். படத்திலோ இரண்டு கைகளையும் தொங்க விட்டு நேரே கீழ்த்திக்கை நோக்குகிறாள். முக்கியமான அமிசங்களில் ரவிவர்மா காளி தாசனுடைய அபிப்பிராயத்தை நோக்காமல் சித்திரபட மெழுதினதற்கு முகாந்திரம் தெரிய வில்லை. காளிதாசனுடைய வர்ணனையில் லக்ஷ ணவிருத்தங்கள் யாதுமிருப்பதாகத் தெரிய வில்லை. ஆனால் காளிதாஸனும் மானிடசுபாவ மறிந்தவனே, ரவிவர்மாவும் அறிந்தவரே. இவ் விருவருக்கும் அபிப்பிராயபேதம் நேரிட்ட காலத்தில் என்னைப்போன்றவர்கள் தீர்மானம் செய்வது கஷ்டமான காரியம். ஆகிலும் இதி லுள்ள நியாயத்தை எடுத்துச்சொல்லி படிப் போருடைய தீர்மானத்துக்கு விட்டுவிடுவது நன்றாம். பிரம்மத்தியானத்தை மேற்கொண்ட யோகிகளெப்படியோ அப்படியே, மோஹ பர வசாளாகிய மானிடரும் தம் தியானவஸ்துசித் திக்கும்பொருட்டு அந்தரங்கமான இடத்தைத் தேடிக்கொள்வார்கள். பர்ணசாலையில் எவரும் இல்லாதிருக்க அதைவிட்டு சற்றே தூரத்தில் வெளியில் கண்ணை யிழுக்கும்படியான காட்சி களின் நடுவில் உட்காரமாட்டாள். ருஷிகள் அதிதிகளாய் வருங்கால் பர்ணசாலையிடம் சென்று தமதுவரவை உள்ளே இருப்பவர்க ளுக்குத் தெரிவிப்பார்கள். அங்கு எவரும் இல்லையாமானால் சமீபத்தில் தோட்டத்தில் புஷ்பம் பரித்துக்கொண்டிருந்த அனசூயை, பிரியம்வதைகளை விட்டு எங்கேயோ உட்கார்ந் திருந்த சகுந்தலையினிடம் வந்து சாபம் கொடுக்கவேண்டுவதென்ன? சாபம் கொடுக்க வேண்டுமென்று யோசித்துக்கொண்டே வந் தாரா? அப்படி யிருக்கமாட்டாதே. காணாத வஸ்து வொன்றை மனதினால் தியானிக்கும வர்கள் வெளி திருஷ்டிமாறி உள்முக திருஷ்டி யாயிருப்பது சகஜம். உள்முகதிருஷ்டியில் தலை கனத்து குனியும்; திருஷ்டி கீழ்நோக்கும். அப் போது கையில் தலையைத்தாங்குவதே சகஜ மான சேஷ்டை. கைகால் சோரவிட்டு திருஷ் டியை நேரே அடிவானத்திற்கு செலுத்தினால் அம்மானிடர்கள் உள்யோசனையின்றி வெளிப் பொருள் மயக்கத்திலிருக்கிறார்களென்றல் லவோ சொல்லவேண்டும். தூர்வாசர் வந்து எதிரில் நின்றகாலத்து குனிந்து தலையுடன் வேறே தியானத்தில் இருந்தால் மாத்திரம் அவரை கவனியாதிருத்தல் சாத்தியமே யொழிய வேறே படத்தில் இருப்பதுபோல் வெளிமுக திருஷ்டியாயிருந்தகாலத்தில் கவ னியாதிருத்தல் சாத்தியமன்று. இந்த மூன்று ஆக்ஷேபங்கள் தவிர அந்த படத்திற்கு வேறு ஆக்ஷேபங்கள் கிடையா. எழுதப்பட்ட வரை யில் நன்றாய்த்தா னிருக்கின்றது. சகுந்தலை உட்கார்ந்திருக்கிற இடமோ வெகு நன்றாயி ருக்கின்றது. கற்பாறையின் இடுக்குகளில் பசு மையான செடிகள் முளைத்திருக்கின்றன. மன மானது வேறு எந்த பதார்த்தத்திலும் நாடா மல், தூரத்தில் மறைந்து இருக்கிற தன் கண வனைத் தியானித்து நிற்கும் சகுந்தலைக்கு,

கிளையாய்ப்பிரியாமல் தூரத்திலிருக்கிற ஆகாசத்தை நோக்கி வளரும் பனமரம் நிழல் தருவது மிகவும் உசிதம். சுபாவம் ஒருமைப்பாடுள்ள விடத்தில்தான் சிநேகம் உறுதியாய் நிற்கும். மோகபரவசர்களுக்கு சங்கற்பம் குறைவுபடும், சில சமயங்களில் அஃது இருக்கவேமாட்டாது. சங்கற்பமில்லாவிடில் தேகாவயவங்கள் சோர்வுற்று நிற்கும். அவைகளெல்லாம் வெகுநேர்த்தியாய் காண்பிக்கப்பட்டிருக்கின்றன. இதுவரையிலும் ரவிவர்மா எழுதியுள்ள சகுந்தலையின் உருவங்களுக்கு இந்த படத்தில் சித்திரிக்கப்பட்ட உருவம் எம்மாத்திரமும் குறைவுபட்டதல்ல. அந்த உருவின் அழகைப்பார்த்து தூர்வாசரையும் அவர் கொடுத்த சாபத்தையும் கவனித்தால் உலகமாயையை வென்ற ரிஷிக்குக் கருணை உண்டாகாமல் இருப்பது சாத்தியமே தவிர மற்றவர்களுக்குச் சாத்தியமல்ல. அதற்கே "ஜாஜி புஷ்பத்தை வென்னீரில் யார் நனைப்பார்களென்று" பிரியம்வதை சொன்னாள். பொதுவாய் நோக்குமிடத்து அது மிகவும் நேர்த்தியான படம். கூடிய சீக்கிரத்தில் ராஜா அவர்கள் அச்சடித்து அதை விற்பனைக்கு அனுப்புவாரென்று நம்புகின்றேன். காவியநாடகாதி சிருங்கார இலக்கியங்களை யனுசரித்து எழுதிய படங்கள் ஜனங்களுக்கு சந்தோஷத்தைக் கொடுப்பதுமன்றி, அவைகளைப்பார்த்து ஆனந்தப்படும்படியான புத்தி நுட்பத்தையும் தருகின்றன. அன்றியும் அந்தக் கிருந்தங்களில் நாட்டமும் உண்டாகும்படி செய்கின்றன. ரவிவர்மாவின் படங்களில் மேன்மையோ குறைவோ எனக்குத்தெரியாது, ஒரு விசேஷம்மாத்திரம் உண்டு: அதாவது அவர் எழுதும் முக்கியமான உருவத்தை விட்டு மற்றப்பொருள்களில் பார்ப்போருடைய கண்கள் செல்வதில்லை. இந்தப்படத்திலும் சகுந்தலையை விட்டு கண்கள் மற்றப்பொருள்களிடம் செல்லவேயில்லை. சுதேச ஸ்திரீ உருவங்களை எழுதுவதில் ரவிவர்மாவினுடைய சாமர்த்தியம் இதரர்களால் அனுசரிக்கப்படத் தகுந்ததல்ல.

எச். வெங்கோபராவ்.

---

## THE HYMNS OF THE VEDAS.

## வேதமந்திரங்கள்.

### III

இனி வைதிக தெய்வங்களில் அதிமுக்கியனாகப் பாவிக்கப்பட்ட அக்கினி தேவனைப் பற்றிச் சிறிது விவரிப்போம். இவ்வக்கினி என்பவன் தீக்கடவுள்; பிரத்தியேகமாக யாகத் தீக்கு அதிதேவதையாக மதிக்கப்படுவன். இக்கடவுளைக்குறிக்கும் சில மந்திரங்களை அடியில் மொழிபெயர்த்துக் காட்டுகின்றோம்.

1. அறிவனு மாகுவை யரச னாகுவை
நெறிவரு குரவனும் நிகழ்த்து நன்மகத்
திறைவனு மாகுவை யெம்மைக் காத்திடும்
அறவனு மாகுவை யங்கி நீயரோ.

2. மானிட ராகும்யாம் வருத்த தூதுபோல்
வானுற வெழுந்திவண் வழுத்து பாடலும்
ஆனறு நெய்யொடு மவியும் கொண்டுசென்
றேனைய சுரர்க்கெலா மியல்பி னீகுவாய்.

3. பாவக நின்னது பிறப்புப் பைப்புனல்,
மேவிய வாயுவெவ் வாணி யாகுமிம்
மூவகை யாமென மொழிவ ராயினும்
தேவரிற் பெரியைநீ செப்பி னீண்டரோ.

4. நாதனீ யுயிரொடு மிறப்பில் நன்மையும்
தீதற வருளுவை சிறப்பி னேகனுய்
ஓதிய மானிடர்க் குறுவ மூன்றொடும்
ஆதியு மிருதியு மகன்று மேவுவாய்.

5. மண்ணிடைத் தீயென வயங்கு வாய்பெரு
விண்ணிடைப் பரிதியாய் விளங்கு வாய்நடுக்
கண்ணிடை வாயுவிற் கதிர்செய் மின்னலாய்
எண்ணுமூ வுருவொடு மிலங்கு வாயரோ.

6. மனைதொறு மூவந்துநின் வரவு கொள்ளுவார்
நினைதரு தந்தையும் நிலவு மைந்தனும்
இனியசோ தரனும்நன் னட்பு மீண்டிய
தனியுப காரியும் சாற்றி னீயரோ.

7. ஏழ்கதி ரிலங்கிய வெழில்கொள் வானவ
தாழ்தரும் நினதடி யேங்கள் தாழ்வற
வாழ்வுறக் காட்டிய வடிவம் எத்தனை
கேழ்வர விவிதமாய்க் கிளர்ந்து தோன்றுமே.

8. ஒருபொழு துன்றனை யொளிரும் பொன்மயத்
திருமவி வடிவமும் திகழ்முச் சென்னியில்
விரிசுடர்க் குஞ்சியும் விழுங்கி யாவையும்
எரிதரு வாயுமா யிலங்கக் காண்பமால்.

9. மற்றொரு பொழுதிடை வயங்கு மாயிரங்
கற்றைகொண் மருப்பொடும் கவினங் காண்பமால்
முற்றிய சுடர்விரி முகங்கொ ளாயிரம்
பெற்றிகொள் வழியொடும் பின்னர்க் காண்பமே.

10. செந்நிறப் பரிகளைப் பூட்டிச் செம்பொனால்
மின்னுற வகுத்ததோர் விளங்கு தேரின்மேல்

மன்னுறு மாருதம் வலியிற் றாண்டவே
இன்னொரு பொழிதிடை யெம்முன் றோன்றுவாய்.

11. நின்னடி பணிந்திடு மெமக்கு நேர்துயர்
என்னவும் களைந்தெம திருளும் தீவினைத்
துன்னிய வழுக்கினிற் றுலக்கி மாசறுத்
துன்னடித் துணையுற வுயர்த்து வாயரோ.

12. இறப்புவந் தெய்துழி யெமது மெய்யினை
உறப்படும் துகட்பொறை யோடு மாய்த்துநேர்
பிறப்பிறப் பில்லதோர் பிறங்கு மாவியை
வெறுப்பறக் கொண்டுநீ மேவு வாயரோ.

13. மேவியெம் மாவியை விளங்கு பேரொளி
தாவிய விடங்களில் தழைக்கு மின்பமார்
தூவரும் பதிகளிற் றுகளி லாரொடும்
ஓவற வுறைந்திட வுய்த்தி யாலரோ.

இவ்வக்கினிக்கு அடுத்த தெய்வம் சூரியன். இவன் தான் செய்யும் பற்பல தொழில்களுக்குத் தக்கபடி சாவித்திரி, அரியமான், மித்திரன், வருணன், பூஷன் என்னும் பற்பல பெயர்களைப் பெறுவான். சிலவேளைகளில் இப்பெயர்கள் வெவ்வேறு தெய்வங்களின் பெயர்களாகவும் கருதப்படும். மேலே கூறியவாறு, இச்சூரியன் அக்நியின் ஒரு ரூபமாகவும் பாவிக்கப்படுவன். இவன் செந்நிறம்கொண்ட ஏழுகுதிரைகள் பூட்டிய இரதத்தில் ஏறி உஷையென்னும் உதையதேவதை முன்னடக்கத் தோன்றுவதாக அடிக்கடி வருணிக்கப்படுவான். இங்கு ஏழு பரியென்றது ஏழுவாரங்களையே உணர்த்தும். பின்வரும் இருக்குவேதமந்திரம் இச்சூரியனை நோக்கிக்கூறுகின்றது.

“ அனைத்தையும் உணர்ந்த தனிப்பெருங்கடவுளை
மனித்தர்கண்டு வக்கவான்மிசையூரும்
பரிதியை உஷைதான் பொருவரு தூதுவன்
போல முன்னடந்து நடத்துதல் காண்க;
செஞ்சுடர் போலவிஞ் சொளிவீசி
உலகினர் யார்க்கும் இலகுற மூறையே
திருமலி யவனுரு தெரிவுறக்காட்டி
அனைத்தையும் காண்கும் அச்சுடர்க்கண் முன்,
இரவொடுசார்ந்து திருடரைப்போல
விண்மீனெல்லாம் விரைந்தொளிப்பனவால்;
இம்பூர்கண் கவராக்கடுப் பொடும் இரவி!
அம்பரத் தனைவரும்காண்குறவாங்கு

செல்லுதி ; ஒளியைத்திக ழுறவாக்கி
மல்லலவ் வொளியாமல் மருவியபுவனம்
முற்றிலும் விளக்குதி ; முதிரொளியோடும்
பற்பல திசையினும் படர்தருமாந்தரும்
முற்ப டுவானத்தமரரும் காண
வான்புலத் தொழிலாத் தோன்றுகிற்றியால் ;
ஒளியருள்வ ருண ! நின் உருவியநோக்கு
முறைமுறை விரைவொடு முன்னிக்காண்கும்
ஓயாதுழலும் உலகமித னையும்
பாயாவிரிவிண்படரிடம்தனையும் ;
எமக்குறு பகலும் இரவும் அளந்து
தமப்பிழம்பகற்றி யெவ்வுயிரையும் காண்கும் ;
சுடர்முடி துன்னியசூரிய, பகல்செய்து
வடிவுறத்தெளிவின் மாண்புற நோக்கும்
வானவ, சேயவாம்பரி யேழும்
மானமில் கடுப்பினின்மானமீர்ப்ப ;
தாமே பூண்ட தகைமலிபரியாம்
தோமறு தேரின் துகளறுபுதல்வியர்
எழுவரோடும் அழகுடன் விரைகுதி ;
விண்ணோர்க் கெல்லாம் மேம்படுவிண்ணவ,
மண்ணு ரிந்தவல்லிருள் கடந்து
மேலெழுந்துன்றன் விரிசுடர் மண்டலம்
போதவுள் விழைவு பொருந்துவமீங்கே.

இம்மந்திரத்துக்குத் துணையாக சர்வப்பிரசித்தமான சாயத்திரி மந்திரத்தையும் இங்கு கூறலாகும். இஃது உயிரளிப்பவன் என்னும் பொருள்கொண்ட 'சாவித்திரி' என்னும் தன்மையில் சூரியனைக் குறித்த ஓர் சிறு பிரார்த்தனையாகும். வேதமந்திரங்கள் எல்லாவற்றினும் மிக்க உத்கிருஷ்டமானது. இதன்பொருளை அநேகர் அறியாராயினும் இந்து தேசத்தில் ஒவ்வோரிடத்தும் உள்ள பிராமணர்கள் ஒவ்வொருவராலும் இம்மந்திரம் அவாது நித்தியகர்மாநுஷ்டானங்களில் பிரதிதினமும் வழங்கப்படுகின்றது. இது இருக்கு வேதத்தில் (III 62-10) உள்ளது. பின்வருமாறு பதங்களை யொட்டி மொழிபெயர்க்கலாகும். "தெய்வத்தன்மை பொருந்திய ஜீவாதாரக்கடவுளின் கரைகடந்த பிரபாவத்தை நினைந்து தியானிப்போம். (அல்லது, தியானிக்கின்றோம்.) அவன் நமது அறிவை விளக்கியருள்க. (அல்லது தூண்டியருள்க.) [தத்ஸவிது: வரேண்யம் பர்கோ தேவஸ்ய தீமஹி, தீயோயோநஃ ப்ரசோதயாத்.]

ஆதிகாலத்திருந்து இந்துக்கள் இம்மந்திரத்தை எவ்வளவோ மகிமையுள்ளதாகப் பாவித்துவருதலினாலே அவர்களில் மெய்யுணர்வுள்ள பண்டிதர்கள், தமது அறிவை விளக்கக் கூடியவன் ஞானசூரியனாகிய கடவுளே யாதலின், அந்த ஞானசூரியக்கடவுளையே கோசரமான சூரியரூபத்தில் பிரார்த்தித்து வணங்கிவந்தனர் என்று நாம் ஊகிக்கத்தக்கது.

இனி உஷஸ்ஸென்னும் வைதிகதெய்வத்தைப்பற்றிக் கூறும் மந்திரம் ஒன்றை இங்கு எடுத்துக்காட்டுதல் உசிதமாயிருக்கும்.

வருகவருக உஷையே வருக ;
பொன்னிறம்கொண்ட பூங்கொடி வருக ;
ஒளிவளர்மானத்து வகையினிருந்து
களிவர யாங்கள் காணுமாவருக ;
நற்றாய்தன்னால் நலம்பெறப்புனையப்
பெற்றவோரெழிலார் பெண்ணணங்கினைப்போல்
கரந்துறுநின் னருங்கவினெலாம் யாங்கள்
வியந்துளங்களிக்க விழிக்கெதிர்காட்டி
நாணமுட்கொண்ட நங்கையின்வருதி ;
அன்பாற் கொழுநன் இன்புறநோக்கும்
தோறுமுற்றினத்தினும் மறுதினம்துலக்கம்
ஓங்குறு மெழிலை யுள்ளுரு செருக்கால்
மணமகன்தனக்கு வனப்புறக்காட்டும்
குணம்லிதூய கோற்றொடிபோலவும் ;
தோன்றுவை ; பன்னூறாண்டுகள்சென்றும்
அழியாவிளமை கழிவரப்பெற்றனை ;
உயிர்த்துயிர்மேய அனைத்தினுக்கும் நீ
உயிர்ப்பும் உயிரும் நயப்புறவாகுவை ;
ஒவ்வொருதினமும் உலப்பறுவோரை
அவ்விறப் பொழித்தாங்கெழுப்புநள்போல
துயிலினின்றுணர்த்தித் தொழிற்படச்செய்வை ;
பறவைகள் தத்தம் குடம்பைவிட்டெழுந்து
சிறைவிரித் தெங்கும் திரிந்திடப் புரிவாய் ;
மாந்தரெல்லாரும் வளர்துயிலுணர்ந்து
ஓடியாடி யுரியதம் நித்தியச்
செயல்களைப்புரியவும் திகழுறுசெல்வமும்
சுகமும்புகழும் மருவமெய்வருந்தி
உழைக்கவும் துயினின்றுணர்த்திடுவாயே.

வைதிகதெய்வங்களைப்பற்றிய இவ்விருத்தாந்தங்களை விடுக்குமுன் இறந்துபோனவர்களுக்குத் தெய்வமாகிய எமனைப்பற்றிச் சிறிது கூறுவோம். மறுபிறப்பைப்பற்றின கொள்கைகள் மந்திரபாகங்களில் காணப்படவில்லையென்று நிச்சயமாகச் சொல்லலாகும். பிற்காலத்தில் பிராமணர்களுடைய மதசித்தாந்தங்களிலும் தத்துவநூல்களிலும் முக்கியமாக விவகரிக்கப்பட்ட கொள்கையாகிய செயலும் நாமரூபங்களும் ஒழித்திருக்கக் கோருவதாகிய கோரிக்கையில் மந்திர ஆசிரியர்களுக்கு எவ்வளவேனும் சம்மதமில்லையென்பதும் அவ்வாறே தோன்

றும். ஆயினும், ஆன்மா நித்திய மென்பதையும், மறுமை உண்டென்பதையும் பற்றிப் பற்பல விடங்களில் ஒருவாறு சூசகமாகக் குறிக்கப்பட்டுள்ளன. இக்குறிப்புகள் இருக்குவேதத்தின் கடைசியைக் கிட்டக்கிட்ட விசேஷமாகவும் நிச்சந்தேகமாகவும் காணப்படுகின்றன. கடைசி மண்டலத்தில் ஒரு மந்திரம் பிதிர்க்களை நோக்கிக் கூறுகின்றது. இப்பிதிர்க்கள் நற்கதியை யடைந்த முன்னோர்களாவர். இவர்கள் மூவகையான லோகங்களில் இருப்பார்கள். எல்லா வற்றிற்கும் மேலானது ஆகாசத்திலும், அதற்கடுத்தது மத்தியப்பிரதேசத்திலும், கீழ்த்தரமானது பூமிக்குச்சமீபமான வாயுமண்டலத்திலும் உள்ளன. இப்பிதிர்க்களுக்கு எப்போதும் பூசையும் வணக்கமும் செலுத்தற்பாலன. இவர்கள் நல்லவர், தீயவர் ஆகிய எல்லாப் பிதிர்க்களுக்கும் இறைவனாகிய எமதர்மராஜாவால் ஆளப்படுவார்கள். முன்னாட் கதைகளின்படி இக்கடவுள் மனிதர்களுள் ஆதியானவனென்றும் (இவனுடன் இரட்டைப் பிள்ளையாகப்பிறந்த சகோதரி யமை என்றும்) இவனே மனிதருள் முதல்முதல் மரணமடைந்தவனென்றும் கூறப்பட்டுள்ளான். ஆதலின் இக்கடவுள் இறந்துபோகும் மற்ற மனிதர்களைத்தான் சென்ற லோகத்துக்குக் கூட்டிச்செல்வதாகச் சொல்லப்படுகின்றனன். சிலவிடங்களில் மரணத்தை இவனது தூதனாகச்சொல்லி இக்கடவுள் வானவொளியிற்றானே இருப்பவனாகவும், அவ்விடத்துக்கு இறந்தோர்கள் கூட்டிச் செல்லப்படுவார்களென்றும், அங்கு அவர்கள் தமக்குமுன் இறந்துபோன தம்பிதிர்க்களோடும் இக்கடவுளோடும் இருப்பார்களென்றும் சொல்லப்பட்டுள்ளது. இக்கடவுள் இறந்துபோனவர்களை நியாயவிசாரணை செய்து தண்டிப்பவனாகப் பிற்காலத்துப் புராணங்களில் சொல்லியிருத்தல்போல வேதத்தில் ஒன்றும் சொல்லப்படவில்லை. ஆயினும் இவனுக்கு நான்கு கண்களும் தாமுமாய் இரண்டு பயங்கரமான நாய்களுண்டென்றும் அவை இவனதிருப்பிடத்தைக் காத்து நிற்குமென்றும் மட்டும் சொல்லப்பட்டுள்ளது. இருக்குவேதத்தின் 10-ம் மண்டலத்தில் இக்கடவுள் விஷயமாகக் கூறப்பட்ட இரண்டொரு விஷயங்களை இங்கு எடுத்துக் காட்டுகின்றோம்.

எமனெனும் வலியுறுமிறையவன் மகிழ
நமது நல்வணக்கமும் பூசையும் நயப்பாம் ;
இறந்துளமாந்தரின் யாரினும் முன்னோன் ;
திறங்கொடுவிரைந்து சென்றிடும்மரணப்
போராறதனைப்பேதுற வொழித்துச்
சாராமுதலிற் றுண்டினனிவனே ;
விண்ணுலகினுக்கு மேவுறும் நெறியைக்
கண்ணுறக் காட்டிக் கதிர்செ யவ்விடத்தே
மற்றவர்தம்மை வரன்முறையழைத்துப்
பெற்றி செய்த பெரியோனிவனே ;
நின்னாற்பெற்ற நிகரறுமனையை
என்னவரேனும் எமைநலிந்தோட்டிக்
கவர்தரும் வலிபெற்றுளர் கொலோகாணின் ?
இறைவனேயாமும் எய்துவம் ; ஈங்கு
பிறந்தோரெல்லாம் இறந்திடல்கடனே ;

நீசென்றென்றெய்திய நெறியின் மற்றெவரும்
தேசுறவாங்கு சென்றிடல்கடனே ;
அந்நெறியூடே அவனியில்மாந்தர்
என்னரும் முறையே யேகியுள்ளாரால் ;
எம்மதுமுன்னோர் ஏகியமார்க்கமும்
அம்ம மற்றதுவே யாகுமன்றோ ?
இறந்தவன் உயிரே ! ஏகுகவவ்வழி
அரந்தை கொள்ளற்க அவ்வழிச் செல்ல ;
மற்றது நின்முனோர் வழிவழிச்சென்ற
பெற்றிகொள் தொன்னெறி பேசிடினுமே;
ஏறுக அந்நெறியி யமன்றன்னையும்
ஊறிலாதவனோடுவப் பினிலுறைந்து
களிப்புறுமுன்னோர் தம்மையும் காண்பான்
அளப்பருமகிழ்வோடாங்கணேறுக ;
மரித்தவர் தம்மை வரவெதிர் நோக்கித்
அருத்திய நான்குவிழியொடும் துன்னிப்
புள்ளிபெற்றிருக்கும் புகாறுஞாளிகள்
கள்ளமின்றிக் காவலினிருப்ப;
மற்றவைக்கஞ்சா துற்றணைந்திடுக.
உயிரேமீண்டும் நின்னுறைவிடம்செல்க,
செயிருறுபாவமும் செயலறுசெய்கையும்
நண்ணுமங்கு ஞாலவேல்விடுத்துக்
காணியாகிக் கவினுறும் கதிர்கொள்
தொல்லைநீயுற்ற துகறுவடிவோ
எல்லையிலொளியார்ந் திலங்குகவன்றே.

இனி ஜகத்சிருஷ்டியைப்பற்றிச் சொல்லுகின்ற இருக்குவேதமந்திரத்தில் ஒன்றை இங்கு காட்டுவோம். இது சிற்சிலவிடங்களில் விவிலியநூலில் (Bible) ஜோபின் வரலாற்றிற் கூறியவற்றை ஒத்திருக்கின்றது.

ஆதியில் உள்ளதும் இல்லதுமில்லை
மீதுறுவிண்ணும் வாயுவுமில்லை ;
ஆயின் மற்றப்போழ் தலகறுபுவியை
மீயுறப்போர்த்து விரிந்ததென்னதுவே ?
யாதினுள்ளடங்கி யிருந்த தன்றுலகம் ?
சீதநீர்ப்பிழம்பின் செறியகட்டுள்ளோ ?
கூறுமக்காலையிற் கூடுறும் கூற்றமும்

வீறு கொல் இறப்பில் மெலியாவாழ்வும்
இரண்டுமில்லை; இலங்கிய பகலும்
திரண்டுறுமிரவும் திகழொளியிருளும்
யாதும் இல்லை: என்று முள்ளொருவன்
ஓதுகிற்றானே உயிர்த்திருந்தனனால்;
மற்றவன் தவிர வானிடத்தென்னினும்
பெற்றிகொள் மற்றைத்தலத் தெனுமில்லை;
அன்னதோர்காலை முன்னுறப்போந்தது
மன்னியவிருளில் மறைந்த தோர்வல்லிருள்;
பின்னர் நீரம் பிறந்திடமெங்கும்
துன்னிமேயது துகளுறக் குழம்பி;
அந்நீர்மிசையே ஆதியாமொருவன்
பின்னிய வொன்றும் இலாமை யென்போர்வை
போர்த்தனன்கிடந்தனன்; புகலுமக்காலை,
உள்ளுற நோக்கி உற்றதன் முயல்வால்
எள்ளறப்பெற்ற இரும்பெரும் யோக
முயற்சியினாலே முதிர்வுற வோங்கினன்;
அந்நாளவனுள் அருமனவங்குரம்
என்னத் தகுமோரிச்சை தோன்றியது;
மற்றதைப்புலவர் வாய்ந்திடும் உண்மையும்
முற்றுறு மின்மையும் இருமையும் மூட்டும்
நுண்ணியபந்த மென்றெண்ணிப்புகல்வர்.
உறங்கி யுள்ளடங்கு முயிரினைத்தீப்போல்
நிறங்கிளந்தெழுந்து நிலவவெழுப்பிய
இச்கதிர்வாய்ந்த தெங்கண்ணின்றோ?
புக்கிருந்ததுவோ புதிதுகண்டதோ?
எல்லாமீனும் இருங்கருவிங்கும்
வல்லவதனை வலியுறுத்தியதோர்
பெருந்திறம் மீதும் பிறங்கிகின்றனவோ?
யரவர் அறிவார் எவரிது புகல்வார்?
பூவரும் அகிலலோகமும் பூத்த
தெங்ஙனமென்றும் யாண்டிருந்தென்றும்
இங்கு நாமறிய இயம்புநர் எவரே?
விண்ணோர் தாமும் விரிந்தவிவ்வுலகம்
பண்ணிய பின்னர் பவித்தவ ரன்றோ?
ஆதலின் மற்றதன் அறிவரும் தோற்றம்
ஈதெனநாடி யியம்புவர் எவரே?

மற்றது தானே வாய்ந்ததோவன்றி
உற்றொரு காரணற் பெற்றுளதாமோ ?
இமையோர் பதங்கள்யாவும் கடந்தாங்
கமைதருவானய் அனைத்தையும் உணர்ந்த
பெருமான் தானே பிறங்குறவறிவன்
ஒருகாலவனும் உணர்கிலனமே.

S. M.

(இன்னும்வரும்.)

---

## A Brief sketch of the Life and Writings of Minakshisundaram Pillai.

## திரிசிரபுரம் மஹா வித்துவான் மீனட்சி சுந்தரம்பிள்ளை யவர்கள் சரித்திரச்சுருக்கம்.

இவர் தற்காலத்துத் தமிழ்ப் புலவர்களில் மிகச் சிறந்தவர். இவர் திரிசிரபுரத்தில் சைவ வேளாளர்குலத்திற் பிறந்து பதினறு வயதிற்குள் இலக்கண இலக்கியங்களைக் கலக்கமறக்கற்றுணர்ந்து ஆசுமுதலிய நாற்கவிகளும் பாட வல்லவராயினர். பின்பு நிகமாகம சித்தாந்த சைவசமயாசாரிய பீடமாய் விளங்காநின்ற திருவாவடுதுறை ஆதினத்தைச் சார்ந்து அங்கு அவ்வாதீனத்துக்கதிபராகிய அம்பலவாண தேசிகரிடத்தே ஞானகலைகள் யாவும் ஓதித்தெளிந்து சிவதீக்ஷை செய்யப்பெற்று அவ்வாதீன வித்துவானகச்சிறந்து விளங்கினர். அக்காலத்து வித்துவான்களில் இவரிடத்திற்கற்றுத் தெளியாதவரில்லை. இவர் தங்கிய இடங்கள்தோறும் அங்கங்கே பற்பல தமிழ்ச்சங்கங்களைத் தாபித்துச் சிவபெருமாள் திருவடித் தாமரையில் எண்ணிறந்த அரிய பாமாலைகளைப்பாடிச் சூட்டித் தமிழ்ச் செல்வ ...ம் சிவபத்தியும் எங்கும் ஓங்கிப் பரவச்செய் ... இவரிடம் படித்து மேன்மைபெற்ற ...வில் முக்கியமானவர்கள், ...மெண்டு நார்மல் பாடசாலை ... புலவராயிருந்து பென்ஷன்பெற்ற வரும், திருவிளையாடற்புராணம் முதலிய அநேக அரிய நூல்களுக்கு உரையெழுதி விளக்கினவருமாகிய திரிசிரபுரம் சோடசாவதானம் சுப்பராயசெட்டியாரவர்கள், கும்பகோணம் காலேஜில் நெடுநாள் தமிழ்ப்புலமை நடாத்திப் பென்ஷன்பெற்ற திரிசிரபுரம் தியாகராஜ செட்டியாரவர்கள், மேற்படி கும்பகோணம் காலேஜில் இவருக்குப்பின் தமிழ்ப் பண்டிதராகப் பெற்றிருப்பவரும், சிந்தாமணி, சிலப்பதிகாரம், புறநானூறு முதலான அரிய பழைய நூல்களுக்குப் புதியவுரைகள் செய்து அவற்றைத் தற்காலத்தாருக்கு எளிதில் விளங்கவைத்தவருமாகிய சாமிநாத ஐயரவர்களும், இன்னம் அநேகரும் ஆவர். குசேலோபாக்கியானம் செய்த தேவராஜபிள்ளை யவர்களும் நீதிநூல், பெண்மதிமாலை முதலிய நூல்கள்செய்துள்ள வேதநாயகம்பிள்ளை யவர்களும் இவரது மாணக்கர்களே யென்பர்.

இவர் இல்லறத்தில் இருந்தும் ஏதோ முகாந்திரத்தால் மனைவி மக்களை விட்டுப்பிரிந்து ஒன்றியாக வசித்திருந்து இன்றைக்கு இருபத்தைந்து முப்பது வருடங்களுக்கு முன்னே தேகவியோகமாயினர். இவர் ஒப்புயர்வில்லாத நிரம்பிய வித்துவானயிருந்தும் எள்ளளவேனும் வித்தியாகர்வமேனும் பெருமையேனும் பாராட்டாதவர்; யாவரிடத்தும் இனிமையாகப் பேசும் இயல்புடையார். உண்மையான சிவநேசமும் ஒழுக்கமும் உடையவர். இவர் அதிசீக்கிரமாகப்பாடும் திறமையுள்ளவர்.

கைத்தலவாமலகமெனத் தனையடைந்தோர்பலர்க்கு மின்னகாலமென்
தெத்தகைய பெருநூலு மெளிதுணர்த்திப்பயனுணர்த்து மிணையிலா

2. அருத்தி மிகவெனையருகிலிருத்தி யருந்தமிழ் நூல்களறைந்துபின்னர்த்
திருத்துறைசை யமர்தருசுப்பிரமணிய வருட்கடலின்றிருமுன்சாரப்
பொருத்தியனையான்கருணைக் கிலக்காக்கியிருபயனும் பொருந்தச்செய்
மருத்த பொழிற்சிரகிரிவாழ் மீனுட்சிசுந்தரநாவலவரேறே.

IV. சென்னை ப்ரீசர்ச் மிஷன் பாடசாலைத் தமிழ்ப்பண்டிதர் தெய்வசிகாமணிமுதலி

நல்லகுண விபவத்தோனல்ல நெறிவழுவாதோன்
பல்லநூலொருங்குணர்ந்தோன் பல்நூலொருங்கியற்றும்
வல்லனுரெனவல்லோர் வயங்குறவோர்க்கினையசென்னச்
சொல்லவரு மீனுட்சிசுந்தர நாவலோனே.

V. தருமபுர ஆதீனம் பரசிவ சுவாமிகள் கூறியது.

புண்ணியமலி கூவிளவனமூக்கீச் சரமுறையூர் முதற்புகல
எண்ணுபல பெயர்கொடலத்தின் மான்மியத்தையிருந்தமிழக் கடல்குடித்
மண்ணிடைப்புலவர் மதிகிலங்குளிரவளமுறு கவிமழைபெய்ய
நண்ணிய கொண்மூவென்னுமீனுட்சி சுந்தரநாவலர் பெருமான்.

VI. மாயூரம்—முத்துச்சாமிபிள்ளை கூறியது.

1. பொன்னுட்டிர்சுவைமிகுநல்ல முதினுமின்கவிமாரிபொழியுமேகம்
கன்னுட்டும்புயத்தரசர்முடிதுளக்கப்பேசுகவிவாணனுய்
தென்னுட்டிற்சிரகிரிவாழ்மீனுட்சிசுந்தரப்பேர்த்திறவின்வல்லோன்
பன்னுட்டும்பாவு திருநாகைக்காரோணச்சீர் பகர்ந்தான்மாதோ.

2. இலங்கூறுமெய்ஞ்ஞானகலை முதலியபல்கலையுணர்ச்சி பேய்ந்தூதூய
நலங்குலவு பொறைவாய்மை யருளடக்க முமவாய்ந்து நலத்தி னின்றும்
விலங்குறுமென்னையுந்தனது மெய்யடியார்குழுவினிடை மேவச்சேர்த்தோன்
வலங்குலவு சிரகிரிவாழ் மீனுட்சிசுந்தரநாவலவரேறே.

E INTERESTING FACTS ABOUT LONDON.

## ண்டன் நகரைப்பற்றின சில
## நாதமான விருத்தாந்தங்கள்.

---

ந்நகரில் 7,54,000 இளம் பிள்ளைகள் பாட
டித்துவருகிறார்கள். இவர்கள் படிப்
க்கு ஷம்தோறும் செலவாகும் பொருள்
காடியே இருபத்தைந்து லக்ஷம் ரூபாய்.
கூடத்துக்கு வாராமல் ஒளியும் பிள்ளை
தேடிப்பிடிப்பதற்கே ரூ. 7,26,075 செல
றதாம்! இவ்வளவு செலவு செய்தும்கூட
00 பிள்ளைகள் (அதாவது மொத்தத்தில்
ஒருபங்கு) ஓடி யொளிந்து பிடிபடாமல் தப்
கொள்ளுகிறார்களாம்.

***

இந்நகரில் 15,500 போலீஸ் உத்தியோகஸ்
ா இருக்கிறார்கள். இவர்களில் 2,000 பேர்
யில் துரைத்தனத்தாரால் பற்பல வேலைகளில்
ாகிக்கப்படுவார்கள். போக 13,500 பேர்தான்
புள்ளார்கள். இவர்களைக்கொண்டுதான் இந்நக
வசிக்கும் அறுபத்தைந்து லக்ஷம் ஜனங்களையும்
க்கி யருளவேண்டும். முக்கியமாகப் பாதுகாக்க
ண்டிய விடம் நகரமையம். இது 670 ஏகரா
வுதான் உள்ளதாயினும் இங்கு இங்கிலாந்தின்
கி ஆபீசும் அனேக பெரிய பெரிய வர்த்தகசங்
களின் ஆபீசுகளும் இருப்பதனால் இங்குள்ள
ம் இவ்வளவென்று அளவிட்டுச்சொல்ல முடி
போலீஸ் வரி சொத்தின்பேரில் பவுனொன்
9-பென்சுவீதம் வசூல்செய்யப்படும்.
ாலீஸ் சம்பந்தமாக மொத்தச்செலவு ரூ 225
க்ஷம் ஆகும். களவு, கன்னம்போடுதல், கொலை,
ற்கொலை முதலான முக்கியமான பெரிய குற்றங்
ள்வருஷம் ஒன்றுக்கு 25,0000. இப்போலீசாரால்
டிக்கப்படுகின்றன. இவை தவிரச் சில்லரைக்குற்
ங்களுக்குக் கணக்கில்லை.

3. இந்நகரில் ஒருநாள் இராத்திரி யேற்றும் தீபங்களுக்காகச் செலவாகும் தொகை ரூ. 1,12,500 ஆகும். இங்கு விளக்குகளுக்கு எண்ணெய் விசேஷமாக உபயோகிப்பதில்லை. நிலக்கரியிலிருந்தெடுக்கப்படும் ஒருவிதமான வாயுபதார்த்தம் உபயோகிக்கப்படும். இவ்வாயுவை உண்டுபண்ணி வேண்டியவர்களுக்கு விலைக்குக்கொடுப்பதற்காகப் பற்பல சங்கத்தார் ஏற்பட்டிருக்கின்றனர். இச்சங்கத்தாரில் முதன்மையான ஒரு சங்கத்தாரால் 2,50,000 குடிகளுக்கு வேண்டிய வாயு விலைக்கு விற்கப்படுவதன்றி 700-தேவாலயங்களுக்கும், 550-ரயில் ஸ்டேஷன்களுக்கும், 300-ஹோடல்களுக்கும், 300-சர்க்கார் முன்ஸிபாலிடி இவற்றின் ஆபீசுகளுக்கும் தயார் செய்து கொடுக்கப்படுகின்றது. இவைதவிர இன்னம் ஆட்டக்கச்சேரி, பாட்டுக்கச்சேரி; நாடகசாலை, வேடிக்கைச்சாலை, ஆசுபத்திரி, கிளப்பு, மார்க்கட்டு முதலான எவ்வளவோ இடங்களுக்கும் இச்சங்கத்தாராலேயே கரிவாயுசெய்து விற்கப்படுகின்றது இவ்வாயு 2,000 மைல்தூரம் குழாய்வழியாக கொண்டுபோகப்பட்டு 50,000 தெருவிளக்குகள் ஏற்றப்படுகின்றன. இவ்வொருசங்கத்தாருக்குக்கீழ் உள்ள வேலையாட்கள்மாத்திரமே 11,000 பேருக்கு மேலே இருக்கிறார்கள்.

***

4. இந்நகருக்கு ஸ்நானபானங்களுக்குவேண்டிய ஜல சமிர்த்தி உண்டுபண்ணுவதற்காக எட்டுச்சங்கத்தார் முயன்றுவருகின்றார்கள். இவர்களெல்லாருமாகச்சேர்ந்து 7,500 கோடி காலன் ஜலம் சேகரித்துக்கொடுப்பினும் சிற்சில சமயங்களில் ஜல சமிர்த்திபோதாமல் கஷ்டப்படவேண்டி வருகின்றது. இந்நகரத்துக்கு அடியில் 200, 300-அடிக்குக் கீழே ஒரு பெரிய ஏரியிருப்பதாகவும் அதன் நீர் மிகவும் சுவச்சமாய் குடிப்பதற் குபயோகமாகுமென்றும் கண்டுபிடித்திருக்கிறார்கள். இந்த ஜலத்தையும் உபயோகித்துக் கொள்ளும்பக்ஷத்தில் ஜலகஷ்டம் முற்றும் விடிந்துவிடும் என்பதில் சந்தேகமில்லை.

## நமது பார்வைக்கு வந்த புத்தகங்கள்.

1. **ஆனந்த தீபிகை**:—இப்புத்தகமானது முதலில் ம-ா-ா-ஸ்ரீ, வெங்கடசுப்பராவால் தெலுங்கில் எழுதப்பட்டுப் பின்னர் தமிழ்ப்பாஷையில் மொழிபெயர்க்கப்பட்டுள்ளது. விசித்திரங்கள், விநோதங்கள், சிட்டுக்கட்டுத் தமாஷ்கள், புதிர்கள், விடுகதைகள், குழந்தைகளின் இனியசொற்கள், சாசங்கள், பரிகாசங்கள், யுக்திவார்த்தைகள், சிறுகதைகள், பழமொழிகள், ஸ்திரீ புருஷர்களது அற்புதக்கடிதங்கள் ஆகிய இவை இப்புத்தகத்திலடங்கியிருக்கின்றன. வேடிக்கைமட்டுமேயன்றி இது புத்திவிசாலத்தையும் உண்டாக்கும்படியான நூல் என்று சொல்லலாம்.

சிட்டுக்கட்டுத்தமாஷ்களில் ஆசிரியர் விவரித்திருக்கின்றவை வியப்பையுண்டாக்கத் தக்கவையேனும், அவற்றினுமதிக வியப்பையுண்டாக்கக்கூடிய பலவித தமாஷ்கள் அதனுள் காணப்படவில்லை. 6-வது அத்தியாயத்தில் (சாசங்கள், பரிகாசங்கள், யுத்திவார்த்தைகள், சிறுகதைகள்.) படிப்பவர் தம் வயிறு புண்ணும் வரை நகைக்கும்படியான விஷயங்கள் பலவுள. ஸ்திரீ புருஷர்களது அற்புதக்கடிதங்கள் என்னும் கடைப்பாகத்தில் தலைவன் தலைவியின் இயல்புகள் நன்கு வெளிப்படுத்தப்பட்டிருக்கின்றன.

இப்புத்தகத்தின் சிற்சில விடங்களில் எழுத்துப் பிழைகளும் சொற்பிழைகளும் உள. ஆயினும் இதனை ஒரு பெருங்குற்றமென மேலோர் கொள்ளார். இத்தகைய புத்தகங்களில் அத்தகைய குற்றங்கள் காண்பது சகஜமாதலின் அடுத்த பதிப்பில் ஆசிரியர் அதனையெல்லாம் நீக்கிப்பிரசுரிப்பார் என்ற எண்ணங்கொண்டே இதை ஈண்டு எடுத்துக் கூறினோம். புத்தகத்தின் விலை ரூபாய் ஒன்றே. அதன் பொருளையும் பயனையுங் கருதுங்கால் அவ்வொரு ரூபாய் அதிகமென்றொருவருஞ் சொல்லார். மைலாபூர் விக்டோரியா டிபோவிலிருந்து விரும்புவோர் புத்தகங்களை வரவழைத்துக்கொள்ளலாம்.

M. V. M.

2. Longman's New Tamil Readers.—லாங்மன்ஸ் சங்கத்தார் பதிப்பித்த முதலாவது இரண்டாவது, மூன்றாவது, நான்காவது வகுப்புத் தமிழ் வாசகபுத்கங்களை வரப்பெற்றோம். இவை சிறுவர்களுக்காக எழுதப்பட்டனவாகையா[ல்] ..ளுக்குத் தக்கபடி எளியநடையில், அவர்க.. அறிவை விருத்திசெய்யக்கூடிய சிறுபா.. எழுதப்பட்டிருக்கின்றன. அங்கங்கே ப.. விளக்குதற்கு ஏராளமான படங்களும் .. பட்டிருக்கின்றன. நல்லகாகிதத்தில் சிற.. கண்களுக்கு அதிகவருத்தம் கொடாதப.. எழுத்தில் அச்சிடப்பட்டிருக்கின்ற.. கூடியவரை சொற்பமென்றே சொ..

3. **யூக்லிட்** என்பவர் இயற்றிய .. கணித பாலபோதினி முதற்புத்தகம்:—.. கம் இன்னதென்பது பள்ளிக்கூடத்திற் .. சிறுபிள்ளைகளுக்கும் நன்குதெரியுமாதலா.. கூறவேண்டியதில்லை. இதைத் தமிழில் பெ.. யர்த்தவர் சேஷம்பாடி இராஜகோபாலாசா.. B. A. அவர்கள். இது லோயர் செகன்.. பண்டித பரிட்சைகளுக்கு (தமிழில்) போ.. தியார்த்திகளுக்கு மிகவும் உபயோகமு.. க்ஷேத்திரகணித மென்பது கணிதசாத்தி.. கடினமான ஒருபாகம். இது முதல் முதல்.. தேசத்தில் வழங்கிவந்தது. இங்கிருந்து இ.. முதலிய தேசங்களின் வழியாய் ஐரோப்பா செ.. அங்கே கிரீக்தேசத்தில் மிகச்சிறந்த கணிதசா.. வல்லவராகிய யூக்லிட் என்பவரால் கிரேக்க பா.. யில் செய்யப்பட்டிருந்தது. பின்னர் நம்மையா.. ஆங்கிலேயர் அதைத்தம் இங்கிலீஷ்பாஷை.. மொழிபெயர்த்துக்கொண்டார்கள். அவர்க.. கொண்டுவரப்பட்டு அங்கிலேயபாஷையில் .. நமது நாட்டில் வழங்கிவருகின்றது. இப்.. நமது தேசத்தில் சமஸ்கிருதத்தில் லீலாவதி எ.. நூலில் இக்கணிதம் வழங்குகிறதேதவிர .. சுதேசபாஷைகளில் இந்நூல் இருப்பதாகத்.. வில்லை. இத்தமிழ் மொழிபெயர்ப்பு, பல வி.. விவரணங்களும், குறிப்புகளும், அப்பியாசங்.. வேற்றுமுறை நிரூபணங்களும் பொருந்தி மா.. கர்களுக்கு மிக உபயோகமுள்ளதாகும்படி எழுத.. பட்டிருக்கின்றது. இதனால் பிள்ளைகள் தம.. சொந்த பாஷையிலேயே இவ்வரியசாஸ்திரத்தை.. சுலபமாக அறியும் வழியையடைவார்கள் என்.. நம்புகிறோம். இவ்வரிய நூலை மிக்க முயற்சியோடு.. தமிழ்ப்படுத்தி வெளியிட்ட இதனாசிரியர்க்கும் நா.. மிகவும் கடமைப்பட்டிருக்கிறோம்.

"INDIAN LADIE'S MAGAZINE"

## இந்திய மேன்மக்கட்கான பத்திரிகை."

---

...சி மாசத்திய 'இந்திய மேன்மக்கட்கான ...ரி, வரப்பெற்ருேம். அதிலுள்ள விஷயங் ...று நான்கு விஷயங்கள் நாம் ஆழ்ந்து கவ ...க்கனவாக விருக்கின்றன.

...பெண்களுக்கு தேகப்பயிற்சி அவசியம். ...ன் பிரிவு பெண்கள் பள்ளிக்கூடம் இன்ஸ் ...மிஸ். பெர்னர்ட் அவர்களால் எழுதப்பட் ...க்டர் மெக்கென்சியும்,டாக்டர் கிலிமெண்ட் ...ம் தமதபிப்பிராயமே யுடையராதலின் அவர் ...ழுதியவற்றிலிருந்தே காட்டிப் பின் தேகப்ப ...ல் ஒவ்வொரு அவயவத்திற்கும் உண்டாகும் ...களைக் கூறுகிருர். இவை பெண்களுக்குமாத் ...ன்றி ஆண்களுக்கும் உபயோகமாகு மாத ...ருபாலார்களுக்கும் பயன்படும்படி இவிடம் ...ாகத் தமிழில் மொழிபெயர்த் தெழுதப்படு ... (1) சதை - இதுதான் நம் தேகத்தின் மிரு ... பாகங்களின் பெரும்பான்மையானது. ...ச் சிறிதாக அழுத்தலால் அசைக்கிருேம். ...சும்மாவிருந்தாலும் அதிகமாக அசைக்கப்பட் ...ம் நஷ்டமடையும். ஆகையால் தேகப்பயிற்சி ...குப் போதுமான அசைதலைக் கொடுத்து ...பலப்படுத்துகிறது. சதை மூச்சுவிடுதலி ...த்த ஓட்டத்திலும், ஜீரணவேலையிலும் அதிக ...ாகப்படுகிறபடியால் இது முக்கியம். (2) மூளை ...நரம்புகளும்:—தேகப்பயிற்சியானது மூளைக் ...போதுமான பிராணவாயுவைச்செலுத்தி கரிய ...யுவை வெளிப்போக்குகிறது. இதனுடைய ...டாகம் படித்துக்களைத்தவன் வெளிச்சென்று ...திப்யிற்சிசெய்தால் உடனே அறிவான். ...ல் அவன் களைப்புமுழுதும் உடனே மாறிவி... (3) மூச்சுவிடுதலும் ரத்த ஓட்டமும்:—ரத்தம் ...ம்பு முழுதிலும் பரவுகிறது. ஆகையால் அது ...தமாயிருப்பது அவசியம். சும்மாவிருந்துவிட் ...ல் கரியமலவாயுசேர்ந்து அதைக் கெடுக்கும். ...கப்பயிற்சியால் பிராணவாயு உள் புகுந்து கரிய ...வாயுவை ஓட்டிவிடும். (4) ஜீரணம்:—சாப்பிட் ...டனே 'தேகப்பயிற்சி செய்வது கெடுதல். ...னனில் அப்படிச் செய்வதால் ஜீரண அவயவங் ...லிருந்து அவைகளுக்கு அவசியமாகவேண்டிய ரத்தத்தையும் அப்புறப்படுத்தும். ஆனல் ஜீரணவேலை முடியுங்காலத்து தேகப்பயிற்சிசெய்தால் நாம் சாப்பிடும் சாப்பாட்டின் பயனை முழுதும் தேகத்தில் பொருந்தும்படி செய்கிறது. (5) தோல். மல ஜலங்களில் கழிவதுபோக பாக்கியுள்ள துர் பதார்த்தங்கள் தோல்வழியாக வெளிப்படுகின்றன. ஆகையால் தேகப்பயிற்சியாலும் கிரமமாகக் குளிப்பதாலும் தோலிலுள்ள துவாரங்களையடைபட்டுப் போகாமல் வைத்திருக்கவேண்டும். இல்லாவிட்டால் மற்ற அவயவங்களும் சீர்கேடடையும். மேலும் தேகப்பயிற்சி செய்தவுடனே தேகத்தைக் குளிர்காற்றில் திறந்துவைத்திருக்கக்கூடாது. தேகப்பயிற்சி பொதுவாக நம்தேகபலத்தை அதிகப்படுத்தி நம்மைப் பார்வைக்கு லக்ஷணமுடையவர்களாக்குகின்றது. சாதாரணநடை போதுமான தேகப்பயிற்சியல்ல குறைந்தது ஒரு நாளைக்கு 10 நிமிஷம் தேகப்பயிற்சி செய்தல்வேண்டும். மேலும் தேகப்பயிற்சியின்போது உடம்பை வஸ்திரங்களால் இறுகக்கட்டிக்கொள்ளக்கூடாது.

2. மகம்மதிய மதத்தைச்சேர்ந்த பேர்பெற்ற மாதர். இதைப்பற்றி "கரீம் பீன் ரமான்" என்பவர் எழுதுகிருர். இப்பேர்க்கொத்த ஓர் நூல் அவசியமே. ஆகையால் ஆசிரியர் பின்னெழுதும் சரித்திரங்களையும் ஆவலுடன் எதிர்பார்க்கிருேம். இப்போது சாஜஹான் சக்கிரவர்த்தி மனைவியாகிய மம்டாஜ்பகால் என்பவர் சரித்திரம் எழுதப்பட்டிருக்கிறது. இந்தச் சக்கிரவர்த்தினி பர்சியாதேசத்து மகம்மதியர் வம்சத்தில் உதித்தவர், ஜிஹான்சியர் சக்கிரவர்த்தியின் தளகர்த்தராகிய ஆசௌகானின் குமார்த்தி. முன் குஷ்னு என்னும் சக்கிரவர்த்தி முதல் மகனுக்கு மணம் பேசப்பட்டுப் பின் சாஜஹானை மணந்தவர். இவர் நிரம்பவும் உதாரகுணமும் குடிகளிடத்துப்பட்சமும் உடையவர். மேலும் மகம்மதிய ராஜாக்கள் சாதாரணமாக அநேகம் ஸ்திரீகளை மணப்பது வழக்கமாகவிருந்தும் சாஜஹான் சக்கிரவர்த்தியானவர் இவர் இறந்தபின் 36 வருஷம் உயிரோடிருந்தும், வேறு பெண்ணொருவளையும் மணந்துகொள்ளாதிருந்ததே இவர் குணமகிமையை நன்கு விளக்கும். இவருடைய பெயரை நிலைநிறுத்தற்பொருட்டு சாஜஹான் சக்ரவர்த்தி ஆக்ராவில் மம்டாஜ் மஹால் என்னும் சிறந்த மாளிகையொன்றைகட்டிவைத்திருக்கிருர் இவ்ருடைய இயற்பெயர் அர்ஜிமண்டுபானு. மம்டாஜ் மஹால் என்ற பெயர் சக்கரவர்த்தியின் அந்தப்புறமடைந்த பிறகு கிடைத்தது.

3. குசராத்தியரான இரண்டு மாது பி. ஏக்கள் இம்முறை பம்பாய் யூனிவர்சிடியில் மூன்று மாதுகள் பி. ஏ. வகுப்பில் தேறிப் பட்டம்பெற்ருர்கள். அவர்களிலிருவர் குசராத்தியார். இவர்களிருவரும் ஆமதபாத் R. B. போலோநாத் சாபி யென்பவரின் பேத்திகள். அவர் குசராத்தில் ஆசாரசீர்திருத்த விஷயத்தில் மிகப் பேர்பெற்றவர். இம்மாதுக்கள் மிஸ்ஸஸ். வித்யாராமன்பாய், மிஸ்ஸஸ். சாரட்டமண்ட் மீடா என்னும் இவர்கள் பேர்களால் விவாகமாய் குடித்தனவழியிலிருப்பவர்களென்று தெரியவரும். வித்யாராமன்பாயின் தகப்பனர் ஆசாரசீர்திருத்தத்தில் உழைத்தவர். இங்கிலாண்டுக்குப் போனதால் ஜாதியைவிட்டு நீக்கப்பட்டவர். வித்யாராம் என்பவர் ஒரு B. A. L. L. B. அவர் பெண்சாதி கிரமமாகப் பள்ளிக்கூடத்தில் சென்று படிக்காமலும், பெருங்குடும்பத்தோடும் இருந்தும் பரீக்ஷையில் தேறினது வியக்கத்தக்கதே. சாரதசாமண்ட் மீடா சீமையில் வைத்தியம் படித்துக்கொண்டிருக்கிருர். அவர் பெண்சாதி 19-வயதானவர். கிரமமாகப் பள்ளிக்கூடத்தில் படித்துத் தேறிவந்தவர். இருவரும் தர்க்கசாஸ்திரமும் தத்துவசாஸ்திரமும் விஷயமாக எடுத்துக்கொண்டவர்கள். முந்தியவர் தம் காலேஜில் முதலில் தேறி யூனிவர்சிடியில் இரண்டாவதுவருப்பும் பெற்று இப்போது பள்ளிக்கூடத்து சகாவாக நியமிக்கப்பட்டிருக்கிருர். இளையவர் தம் பள்ளிக்கூடத்தில் இரண்டாவதாக நின்றும் இரண்டாவது வகுப்பில் தேறக் கொஞ்சம் 'மார்க்குகள்' வேண்டியவராக இருக்கிருர். அவர் தம் காலேஜில் சம்பளமில்லாத சகாவாக நியமிக்கப்பட்டிருக்கிருர். இவர்களுடைய உருவப்படம் இப்பத்திரிகையில் பதிக்கப்பட்டிருக்கிறது மிகவும் நேர்த்தியாக விருக்கிறது.

## Some Interesting Facts.

## விசித்திரமான விஷயங்கள்.

1. பூமியை சந்திரனிடத்திலிருந்து பார்க்கக் கூடுமாயின் அது சந்திரனைப்போலவே வட்டமாயும் ஒளியுடையதாயும் தோன்றும். ஆனல் சந்திரனைவிடப் பதின் மூன்று பங்கு பெரிதாகமட்டும் தோன்றும். பூமி உருண்டை வடிவான தென்பதற்கு அநேக நியாயங்கள் உள்ளன. அவற்றுள் மூன்று அடி[...] வன :—

i. சமுத்திரத்தில் பிரயாணம் செ[...] பல்கள் கரையை அடுக்கும்போ[...] யில் நிற்பவர்களுக்கு முதலி[...] கூம்பு தோன்றும். அதன்பி[...] ளும் அதன்பின் அடிப்பக்கமு[...] றும். ஏனெனில், பூமியின் மே[...] தட்டையாகாமல் உருண்டை[...] தலினல் அது உப்பி நின்று நம[...] பலுக்கும் மத்தியில் தடையாய் [...] உருண்டையாகாமல் தட்டைய[...] யிருக்குமாயின் பெரிதாகிய அடி[...] தான் முதலில் தெரியவேண்டும்.

ii. மாலுமிகளுக்கும் அவ்வாறே க[...] அடுக்கும் போது முதன் முத[...] யில் நெடுந்தூரத்துள்ள மலைகளி[...] காணப்படும். பின்பு கரையை [...] நெருங்க அம்மலையின் பக்கங்களு[...] பிரதேசங்களும் முற்றிலும் க[...] அடுத்தபின் அம்மலை முழுதும் கா[...] டும். இதுவும் அதேகாரணத்தால்[...]

iii. பூமியைச்சுற்றி ஓடும் கப்பல்கள் ஓ[...] திலிருந்து புறப்பட்டு ஒரேமுகம[...] திரும்பிப்பாராமற் சென்றுகொண்[...] பின் கடைசியில் புறப்பட்ட இடத்[...] வந்து சேரும்.

ஐந்நூறுவருஷங்களுக்கு முன்னே ஐ[...] பியர்கூடப் பூமி தட்டையான தென்று[...] மண்டபம்போல ஸ்தம்பங்களின்மே[...] தப்பட்டிருப்பதென்றும் எண்ணியிருந்தார்[...] அதற்கு நெடுநாள் முன்னிருந்த உரோ[...] ளும் கிரேக்கர்களும் அது 'அட்லாஸ்' [...] னும் தேவனல் தோளில் தாங்கப்பட்டிரு[...] தென்று நம்பியிருந்தார்கள். இந்துக்கள் [...] ரந்தலைப்பாம்பின்மீதும் அஷ்ட கஜங்க[...] மீதும் ஆதி கூர்மத்தின் மீதும் தாங்கப்ப[...] நின்றதென் றெண்ணினதென்ன புதுமை? [...]

ாங்கி நிற்பது கடவுளுடைய ஆதாரசத் யன்றி வேறல்லவென்று புத்திமான்கள் தும் கொண்டிருந்தார்கள்.

---

ஆலமரமானது வெகுதூரம் வேரோடி ிட்டுப் பரவி அற்புதமாகிய பெரிய ம்போல இனிய நிழலைக்கொடுக்கும்.

ர்ளிய ஆலின் சிறுபழத்தொருவிதை
ணீர்க்கயத்துச் சிறுமீன் சினையினும்
ணிதே யாயினும் அண்ணல்யானை
தேர்ப்புரவி யாட்பெரும்படையொடு
னர்க்கிருக்க நிழலாகும்மே'

சொல்லியது கேவலம் கவிப்புளுகு ற எண்ணவேண்டாம். நர்மதாநதிக்க ல் ஒரு ஆலமரமிருக்கின்றது. அது 2,200 ற்றளவும் 354-மரம்போன்ற பெருவிழுது 3,000-க்கு மேற்பட்ட சிறு விழுதுகளும் யது. அதன் கிளைகளுக்குள் எண்ணி பக்ஷிகணங்களும் குரங்கினங்களும் ழும். இவ்வற்புதமான மரத்து நிழலில் காலத்தில் அரசர்கள் தம் சேனைகளோடு ளயம் இறங்குவது வழக்கம்.

ம்மரத்தின்கீழ் அரசன் புலிவேட்டைக் சென்ற காலத்தில் தன்பரிவாரங்களோடி விருந்து வந்தவர்களை உபசரிப்பது வழக் மரத்தடியில் உள்ள பற்பல விடங்களும் மயற்கட்டு, சாப்பிடும் கூடம், கச்சேரிச்சா கொலுக்கூடம் என்று பற்பல காரியங்க த உபயோகப்படுத்தப்படும். யானை, ர முதலியவாகனங்களும் வேட்டைக் ரர்களும் வேலைக்காரர்களுமடக்கம். ஏழா ம் எண்ணூயிரம்பேர் இருப்பார்கள். அவ்வ வுபெருக்கும் அம்மரம் நெருக்கமில்லாமல் ங்கொடுக்கும். இவ்விடத்தில் வெய்யிலின் ாபம் நீங்கி மாலைக்காற்று குளிர்ந்தடிக்க அர னும் விருந்தாளிகளும் உல்லாசமாக உட் ர்ந்து ஷர்பத்தை உரிஞ்சியுண்டு, மேலே ரங்குகள் கீச்சுக்கீச்சென்று கத்தப், பக்ஷிகள் பாட, நிலாவெளிச்சம் மரக்கிளைகளூடே தோன்ற, எதிரில் ஆடுகின்ற நாட்டியப் பெண்களின் நடனத்தைக்கண்டு மகிழ்ந்திருப்பார்கள்.

இம்மரம் நெடுங்காலம் ஜீவிப்பது. கிரேக்கு தேசாதிபதியாகிய மஹா அலெக்ஸாந்தர் என்பவர் கி. மு. 327-ம் வருஷம் இத்தேயத்தின் மீது படையெடுத்து வந்தகாலையில் அவரோடு சண்டைசெய்யும்படி பஞ்சாப் மன்னனாகிய புருஷோத்தம ராயர் தமது யானைப்படைகளைச்செலுத்திச் சென்ற அக்காலத்திலும் இருந்தனவாம் தற்காலத்திலுள்ள சில மரங்கள். ஆனாலிதன் வயசை நீங்கள் நிதானித்துக் கொள்ளலாம்.

---

3. புகையிலை முதல் முதல் அமெரிகா கண்டத்திலிருந்து 1586-ம்[illegible]த்தில் ஸர் வால்டர் றலி என்பவரால் இங்கிலாந்துக்குக்கொண்டுவரப்பட்டது. அப்போது அதன் உபயோகம் ஒருவர்க்கும் தெரியாமையால் அதை நாடுவாரில்லை. இப்போது இதை உபயோகிக்காத இடம் கிடையாது. சிலர் பொடியாச்செய்து மூக்கில் போடுவார்கள்; சிலர் சுருட்டாச் சுருட்டிப்புகையைக் குடிப்பார்கள்; வேறு சிலர் அப்படியே கிள்ளி வாயிற்போட்டு மெல்லுவார்கள். எப்படியானால் என்ன?

துருக்கிதேசத்தில் புகையிலைக்குழாயை வாயைவிட்டுத் தூங்கும்போதுதவிர மற்றப்போது எடுப்பதேயில்லை. தூபம்போலப் புகைத்துக்கொண்டேயிருக்கும். இந்தியாவில் தான் சொல்லவேண்டியதில்லையே. மலையாளம்முதலிய தேசங்களில் ஆண்பெண் அடங்கலும் புகையிலை போடுவார்கள். தென்னாடுகளில் விசேஷமாகப் பொடியாகவும், வடதேசங்களில் சுருட்டாகவும் உபயோகப்படுத்துவார்கள். பர்மாதேசத்தில் மேலோர் கீழோர் எல்லாரும் சுருட்டுப்பிடிப்பார்கள். இன்னம் முலைப்பால் மறவாத இரண்டு மூன்று வயதுக் குழந்தைகள் கூடச் சுருட்டுப்பிடிக்குமாம்! சீனதேசத்தில் இந்த வழக்கம் மிகுதியாயிருப்

பதினுலே ஆறேழுவயதுப் பெண் முதலாக
ஸ்திரீஜனங்களில் ஒவ்வொருவருக்கும் புகை
யிலையும் குழாயும் போட்டுவைத்துக் கொள்வ
தற்காக பட்டுப்பை யொன்று சிறிதாக உடை
யோடு ஏற்பட்டிருக்கும்.

புகையிலை இந்தியாவில் அநேக இடங்களில்
பயிராகும். ஹிந்துஸ்தானத்தில் இது பயிர்
செய்யாத ஊரேயில்லை. உயர்ந்த புகையிலை
உண்டாகும் இடங்கள், பங்காளராஜதானியில்
டிர்ஹுரட்டும், பம்பாய் ராஜதானியில் கெயி
ராவும், சென்னை ராஜதானியில் கோதாவரியு
மாம்.

---

4. வஸ்திரங்கள் பருத்தி நூலினுல் செய்
யப்படும். என்பது தெரிந்த விஷயமே. இது
தவிர சணல் முதலிய பலவகையான நார்களா
லும் நாணயமான வஸ்திரங்கள் செய்யப்படும்.
அன்றி மிருகங்களின் மயிர்களாலும் செய்யப்
படும். ஆட்டுமயிரைத் தவிர, அமெரிகாதே
சத்தில் பேரு என்னும் தேசத்தில் லாமா, அல்
பாகா என்று இரண்டு மிருகங்கள் இருக்கின்
றன; அவற்றின் உரோமத்தாலும் நாணய
மான உயர்ந்த வஸ்திரங்கள் செய்யப்படும்.
காஸ்மீரதேசத்திலும், துருக்கி தேசத்தில் அங்
கோரா என்னும் ஊரிலும் உள்ள வெள்ளாடு
களின் மயிர் மிகவும் சிரேஷ்டமானது. அத
ஞல் உயர்ந்த சால்வைகளும் சரிகைச் சேலைக
ளும் செய்வார்கள். இவைதவிரப் பட்டுப்பூச்சி
யினுல் நூற்கப்பட்ட பட்டால் ஒளியும் மிருது
வும் உள்ள உயர்த்தியான அநேக ஆடைகள்
செய்வது பலருக்கும் தெரிந்த விஷய
மேயன்றோ?

---

5. சிம்பன்ஸி என்னும் ஒருவகை வாலில்
லாக் குரங்கு ஆப்பிரிகா கண்டத்தின் மேற்
குத்திசைகளில் இருக்கின்றது. இது மற்றக்
குரங்குகள் எல்லாவற்றினும் உருவத்தில் மனி
தனை ஒத்திருக்கின்றது. இதைப்பிடித்து எளி
தாகப் பழக்கிவிடலாம். இது சுபாவத்தில்
மிகுந்த சூசனையும் பிள்ளைகுட்டிகளிட
மிக்க பக்ஷமும் உள்ளது. மரத்தின்
கொம்புகளில் கிளைகளாலும் இலைக
குடிசை மாதிரி மழைக்குக் காற்றுக்கு
மாய் கூடு கட்டிக்கொள்ளும். அக்
பெண் குரங்குகளையும் பிள்ளைகளையும்
ஆண் குரங்கு வெளியே சமீபத்தில்
யிருக்கும்.

---

6. வெட்டுக்கிளியைப்போல மனித
குச் சேதம் உண்டுபண்ணுபவை வே
இவை செல்லும் போது கடல் கரைபுர
போலவே தோன்றும். இவற்றின் கூ
தைக்கணக்கிடமுடியாது. இவை செ
போது உண்டாகும் தொனி மரமடர்ந்த
டில் பெருமழை பொழிந்ததுபோல விரு
அவைகள் சென்ற மார்க்கத்தில்
கொடி புல் பூண்டு ஒன்று வைக்கமா
எல்லாவற்றையும் தின்று விளைவயல்க
தோட்டங்களையும் பாலைவனம்போலப் பா
கிவிடும்.

1811-ம் ஹுத்தில் 'ஆசியா மைனரில்'
ஞகரத்தைச்சுற்றி ஒரு கூட்டம் சென்
அப்போது வானம் பெருத்த பனிம
பெய்வதுபோலத் தோன்றியது. அவை
துபோகையில் உண்டான ஓசை சூறைக்
றின்ஒலிபோ லிருந்தது. அவை மணியெ
றுக்கு ஏழுமைல் வீதம் பறந்து சென்றும்
படை அவ்வூரைத் தாண்டிச்செல்ல மூ
நாள் அகோராத்திரம் சென்றன.

அதே வருஷத்தில் வட இந்தியாவி
இவைகள் தோன்றிப் பயிர்களையெல்லா
அழித்துவிட்டதனுல் கொடியதோர் க்ஷாப
உண்டாகி ஆயிரக்கணக்காக ஜனங்கள் மடி
தார்கள்.

இவை பயிர்களையழித்துப் பாழ்செய்
தன்றி தாமும் இலக்ஷக்கணக்காய் மடிந்
போவதனுல் பொறுக்கமுடியாத துர்க்க

யுண்டுபண்ணி ஆகாய மெங்கும் ...ாக்கி அதனல் ஜனங்களுக்கு மரணத் ...காரணமான கொடிய நோய்களையும் ...ன்னும்.

---

...மெரிகா தேசத்தில் அத்தேசம் ... கண்டுபிடிக்கப்பட்ட காலத்தில் ...ள் என்னும் நாமதேயமேயில்லை. ...ரோப்பியரால் குதிரைகள் அத்தேயத் ...கொண்டுபோகப்பட்டு அக்குதிரை ... காடுகளிற் சிதறிப்போய் விருத்தி ...போது காட்டுக் குதிரைகள் கணக் ...ல் இருக்கின்றன. இக்காட்டுக் குதிரை ...தேச அமெரிக்கர் வேண்டும்போது ...' என்னும் ஒரு வகையான சுருக்குக் ...ல் மாட்டிப் பிடித்துப் பழக்கிக்கொள் ....

---

ஆப்பிரிகா தேசத்தில் யானைகளை வேட் ...டி அவற்றின் தந்தத்துக்காகக் கொடு ...ாகக் கொல்லுவார்கள். சுதேசிகளின் வெட்டுக்குத் தப்பினலும் ஐரோப்பியர் ...க்கிகளுக்குத் தப்பமாட்டாமல் பாவம், ... பிராணனை இழக்கின்றன.

---

CURRENT NOTES.

## விசேஷக்குறிப்புகள்.

...டப்ரின் பிரபுவின் மரணம்.— ...-ம்ஞு முதல் 1888-ம்ஞுவரையில் நம ...த்துக்கு ராஜப்பிரதிநிதியும் கவர்னர் ஜெனரலு ...ருந்த டப்பரின்பிரபு (Lord Dufferin) ...ன்ற பிப்ரவரி 12உ மரணமடைந்ததாகக் ...வியுற்று மிகவும் விசனிக்கின்ரேம். இவர் ...து ஜனங்களுக்கு மிகவும் நல்லவரென்றும் அதிப் ...மானவரென்றும் பெயரெடுத்த ரிப்பன் பிரபு ...ப் (Lord Ripon) பின்னும் லான்ஸ்டௌன் ...வுக்கு (Lord Lansdowne) முன்னும் இத் ...த்தைப்பரிபாலித்தவர். இவர் இதர தேச துரைத்தனத்தாரோடு ராஜ்யசம்பந்தமான விவகாரங்களைச் சிடுக்கறுத்துப் பரிசீலனஞ்செய்வதில் வல்லவரென்று பேர்பெற்றவர். கல்வியிலும் பேச்சுவார்த்தைகளால் பிறரை வசியஞ்செய்வதிலும் சிறந்தவர். அநேக உத்தியோகங்களை வகித்து அநேக வியவகாரங்கள் தெரிந்தவர். இங்கு ராஜப்பிரதிநிதியாயிருந்த காலத்தில் இத்தேசத்தார் துரைத்தனசம்பந்தமாக அடையவிரும்பும் மேன்மைகளை அவர்கள் அடைதற்கு அநுகுணமாயிருந்தவர். இவர்காலத்தில் பர்மாதேசம் ஜெயிக்கப்பட்டது ஆதலால் இவருக்கு ஆவாபிரபு என்று இன்னெருபட்டமு முண்டாயிற்று.

இவருடைய மரணச்செய்தியைக்கேட்டபோது நமக்குத் தற்காலம் ராஜப்பிரதிநிதியாயிருக்கும் கர்ஸன் பிரபு (Lord Curzon) சட்டநிரூபணசபையில் பின்வருமாறு இவரது குணதிசயங்களைப்பற்றிக் கூறினர். "டப்பரின் பிரபு இத்தேசத்துக்கு ராஜப்பிரதிநிதியாய் வந்தகாலத்தில் அவருக்குமுன் அந்தஸ்தானத்தில் இருந்த அநேகரைக்காட்டிலும் வயது முதிர்ச்சியடைந்திருந்தமையாலே அநேக இடங்களில் அநேக உத்தியோகங்களிலிருந்து பெற்ற அநுபோகத்தினல் தேர்ந்து முதிர்ந்த மகா உத்கிருஷ்டமான புத்திசாதுரியமும், மனிதர்களுடைய குணகுணங்களில் நல்ல பிரஜ்ஞையும் யாவருக்கும் பிரியமூட்டுகின்ற இனிய சுபாவமும்பெற்றிருந்தனர். ஆதலால் அவர் இங்கிருந்த சொற்பகாலமாகிய நான்கு வருஷத்துக்குள்ளே இத்தேசத்தின் அரசாட்சியிலும் சரித்திரத்திலும் தம்பெயரை அழியாமல் நிலைநிறுத்த வல்லவராயினர். இவரை இத்தேசத்தார், இவ்விந்து மகாராஜ்யத்தின் எல்லையை நெடுந்தூரம் வியாபிக்கச்செய்தது மாத்திரமல்லாமல், அயல்தேசத்தாரோடு சிநேகபந்தத்தை உறுதிப்படுத்தி இராஜ்யத்துக்குள்ளே ஜனசௌக்கியத்தையும் அமைதியையும் விருத்திபண்ணின ஒப்பற்ற ராஜதந்திரியாக என்றென்றைக்கும் கருதுவார்கள். இந்தப்புகழ்பெற்ற இங்கிலீஷ்காரரின் மரணத்தைக்கேட்டு உலகமுழுதும் துக்கசாகரத்தில் மூழ்குவதுபோலவே இவ்விந்தியாவும் துக்கத்தில் மூழ்குமென்பது நிச்சயம்."

மேலே சொன்னது அவ்வளவும் உண்மையே.

---

**2. சர்வகலாசங்கச் சீர்திருத்தம்.—**

இத்தேசத்தில், சென்னை, பம்பாய், கல்கத்தா, அலஹபாத், லாஹோர் என்னும் ஐந்திடங்களில்

அந்தந்தமாகாணங்களுக்குரியதாய் ஐந்து சர்வகலா சங்கங்கள் ஏற்பட்டிருப்பது யாவர்க்கும் தெரிந்த விஷயமேயன்றோ? இவற்றில் முன்னைய மூன்றும் பழமையானவை. பின்னைய இரண்டும் நூதனமானவை. இச்சங்கங்களில் சிற்சில சீர்திருத்தங்களை உண்டுபண்ணி இப்போதிலும் இந்நாட்டுக்கு வித்தியாபிவிர்த்தி செய்யும்விஷயத்தில் இன்னம் அதிகப்பயன்படும்படிச் செய்யும்பொருட்டு யூனிவர்ஸிடி கம்மிஷன் (University Commission) என்று ஒரு விசாரணைசபையார் நியமிக்கப்பட்டு அவர்கள் அங்கங்கேசென்று அவ்விஷயமாக விசாரித்துவருகிறார்கள். இவர்கள் விசாரிக்கும்விஷயங்களில் முக்கியமானவை, யூனிவர்ஸிடியார் இப்போது செய்துவருதல்போல இதரமான கல்விச்சாலைகளைக்கொண்டு கல்விகற்பித்துப் பரிக்ஷை செய்து பட்டங்கொடுப்பதேயன்றித் தாமே கல்விச்சாலைகளை யேற்படுத்தி வித்தியார்த்திகளுக்குக்கற்பிக்கும் தொழிலையும்கூட மேற்கொள்ளவேண்டுமாவென்றும், செனெட் (Senate) என்னும் அதிகாரசபையாரின் தொகையைக்குறைத்து யோக்கியதையை வரையறுத்துச் சீர்திருத்துவது அவசியமாவென்றும், ஸின்டிகெட் (Syndicate) என்னும் காரியநிர்வாக சபையில் என்னென்ன சீர்திருத்தங்கள் செய்யவேண்டுமென்றும், அங்கத்தாரை (Fellows) நியமிக்கும்விஷயத்தில் யாது சீர்திருத்தங்கள் வேண்டுமென்றும், இன்னம் படிப்புவிஷயமாக என்னென்ன மாற்றங்கள் செய்யவேண்டுமென்றும் இன்னம் சிற்சில விஷயங்களுமாம். இவர்கள் இவ்விஷயங்களைத் தீரவிசாரித்துத் தக்க சீர்திருத்தங்களைச் செய்வாராயின் இப்போது துர்ப்பலப்படாவிடினும் அவ்வளவு திருப்திகரமாக மதிக்கப்படாத உயர்தரப்படிப்புகள் மேலும் சிறப்புற்றோங்குமென்று நம்பத்தக்கது.

---

**3. இங்கிலாந்துக்கும் ஜப்பானுக்கும் சக்கியம்.—**

இங்கிலாந்துக்கும் ஜப்பானுக்கும் பரஸ்பரம் யுத்தசமயங்களில் உதவிசெய்யும்படி சக்கியம்செய்துகொள்ளப்பட்டிருக்கிறது. இதனால் அங்கிலேயருக்கு சீனமுதலிய கீழ்நாடுகளில் உள்ள செல்வாக்கும் பலமும் முன்னிலும் அதிகரிக்கும் என்பது நிச்சயம். அங்கிலேயருக்கு இதுவரையில் வேண்டிவந்ததுபோல ஜர்மானியரையாவது அமெரிக்கரையாவது தழுவிக்கொட்டி நாடவேண்டியதில்லை. ஜப்பானுக்கும் அங்கிலேயர் நேசத்தால் மிக்க நன்மையுண்டாவதில் தடையில்லை. இந்தப்பிர... ஆட்சியும் மேன்மையும் கோரிநிற்பவர் ... ரைத்தவிர உருஷியா, பிராஞ்சியர், ஜ... என்னும் மூவகை ஐரோப்பிய ஜாதியார்... இவர்களில் உருஷியரும் பிராஞ்சியரும் அங்கிலேயரோடு போட்டியும் பரஸ்பர... கொண்டவர். ஜர்மானியர் யாவர்பக்ஷம்... களோ அறியோம்.

---

4. இவ்வருஷத்தில் இரண்டு பெண்... சென்னைராஜதானியில் எம். ஏ. பரிக்ஷை... துத் தேறியிருக்கக்கண்டு சந்தோஷிக்கிறோ... களில் ஒருவர் மிஸ். ஹானு ரத்னம் என்ப... தற்காலம் மங்களூர் சப் - ஜட்ஜியாயி... சிவராமகிருஷ்ணம்மா என்பவரின் கும... சென்ற வருஷத்தில் இந்த எம். ஏ. ... கொடுத்துத்தேறின மிஸ்ஸஸ் சத்தியநாத... னும் நங்கைக்குச் சகோதரியும். அவர் ... இவ்வளவு பெரிய பரிக்ஷைகளைக்கொடுத்... மக்களோடொப்பத்தேறுதல் மிகவும். சி... இன்னொருவர் தேறியிருப்பவர் ஓர் யூரேஷி...

---

5. சீனதேசத்தில் பத்து லக்ஷம் தேவ... களும், ஐம்பது லக்ஷத்துக்குமேல் நூறு லக்ஷ... குட்பட்ட விக்கிரகங்களும் இருக்கின்றனவாம்...

---

6. சிகாகோ வென்னும் அமெரிகா நகர... ஒரு குடும்பத்தில் ஒரு பெண்ணுக்கு இரண்டு... டத்துக்குமுன் ஒரே பிரசவத்தில் முப்பி... பிறந்து இப்பொழுது நாற்பிள்ளை பிறந்திருக்... னவாம். சிசுக்களெல்லாரும் ஜீவனோடிருக்கி... களாம்.

---

7. மைசூர் நகரில் ஏற்படுத்தப்பட்டி... சர்க்கார் வைத்தியசாலை (ஆஸ்பத்திரி) யொன்... இங்கிலீஷ் மருந்துகளுக்குப்பதிலாக நாட்டு மரு... களும் மூலிகைகளும் நோயாளிகளுக்குக் கொடுக்... படுகின்றனவாம். இவ்வாஸ்பத்திரியில் முக்கியம... வைத்தியர் ஆயுள் வேதத்தில் தேறிய ஒரு ப... தர். இங்கிலீஷ் மருந்து உட்கொள்ளுதற்குப் பி... மில்லாத அநேகருக்கு இவ்வைத்தியசாலை மி... நன்மையைச் செய்கின்றதாம்.

# சிறுவர்க்கான பக்கம்.

[விவேகசிந்தாமணியை வாசிக்கும் சிறுவர் சிறுமிகளுக்காக எழுதப்பட்டது.]

## SHEPHERD AND THE PHILOSOPHER.

## இடையனும் பண்டிதரும்.

ளேகளே, நீங்கள் பள்ளிக்கூடத்தில் தியாயரால் புத்தகங்களிலிருந்து க்கப்பட்டு அநேக விஷயங்களைத் தெரிந் ள்ளுகின்றீர்கள். முதல் முதல், எல் ற்கும் ஆதாரமாய் பாஷையை அந்வ அர்த்தம் செய்துகொள்ளவும், பின்பு வழியாய் நீதிமார்க்கம், பூகோளம், ாம், சரித்திரம் முதலான பற்பல சாஸ்தி ளயும் தெரிந்துகொள்ளவும் கற்கின்றீர் ஆயினும், புத்திசாலிகளாயிருப்பவர்கள் முகமும் புஸ்தகமும் இல்லாமலே, னக விஷயங்களைத் தாங்களே உற்றுநோக்கி த்தையும் கவனத்தையும் செலுத்தி ந்துகொள்ளலாம். ஒருவன் பலவிஷயங் யும் தெரிந்திருப்பதற்கும் இன்னொருவன் றையும் அறியாமல் மூடனாய் இருப்பதற் பொருள்களை உற்றுநோக்கி ஊகித்துணர் ம் அவ்வாறு உணராமையுமே காரண தும். உற்றுநோக்கிச் சிந்தித்துணராதவர் உலகமெல்லாம் ஓடித்திரிந்தாலும் ஒன் யும் அறியமாட்டார்கள். உற்றுநோக்கிச் திப்பவர்களுக்கோ நெடுந்தூரம் செல்ல ண்டிய அவசியமில்லை. தங்களைச்சூழ்ந்தி க்கும் பசு பக்ஷி மிருகங்களைக்கண்டே எவ் வோ நீதியும் உண்மையும் தெரிந்துகொள் லாகும். இதற்குதாரணமாக உங்களுக்கு சிறு கதை சொல்லுவேன் கேளுங்கள்.

நெடுநாளைக்குமுன்னே, பட்டணவாசங்க க்கு நெடுந்தூரத்தில், நாட்டுப்புறத்தில் ஊரில் ஒரு இடையன் தன் ஆடுமாடுகளை மேய்த்துக்கொண்டு ஆசாபாசங்களால் விசாரப்பட்டு மனம்தளராமல் சுகமாக ஜீவனம் செய்துவந்தான். அவன் மகா புத்திமான் என்றும் ஞானவான் என்றும் பலராலும் மெச்சிக்கொண்டாடப்பட்டுவந்தான். அவன் பொறாமை, பேராசை முதலிய தீக்குணங்களில்லாமல், மெய்வருந்தி உழைத்துச் சந்தோஷமாகக் காலம் கழித்துவந்தான்

இவ்வாறு அவனிருந்துவருகையில், அவனுடைய அறிவையும் பெருமையையும் சோதித்தறியவெண்ணி, வேதசாஸ்திரங்களைப் படித்துக் கரைகண்ட பண்டிதர் ஒருவர் அவன் குடிசையை அடைந்து, அவ்விடையனைநோக்கிப் பின்வருமாறு கேட்கலாயினர்:—"ஏனப்பா! நீ எவ்வளவோ தெரிந்தவன் என்று யாவரும் உன்னைப் புகழ்கின்றார்களே. உன் வித்தையை நீ எங்கே சம்பாதித்தாய்? நீ தர்க்கவியாகரண மீமாம்சாதிசாஸ்திரங்கள் படித்திருக்கிறாயா? இதிகாசபுராணங்களைக் கற்றிருக்கிறாயா? சுருதிஸ்மிருதிகளில் எவ்வளவேனும் உனக்குத் தேர்ச்சியுண்டா? அல்லது, நீ பற்பல தேசங்களுக்கும் சென்று, அங்கங்குள்ள ஜனங்களின் நடையுடை பாவனைகளையேனும் பார்த்தறிந்திருக்கிறாயா?"

இவற்றைக்கேட்ட அவ்விடையன் மிக்க வணக்கத்தோடு,—"ஐயா, பண்டிதசிரேஷ்டரே, நான் சாஸ்திரங்களையும் அறியேன், சம்பிரதாயங்களையும் அறியேன். தேசசஞ்சாரமும் செய்ததில்லை. மனுஷ்யாது சட்டதிட்டங்களையும், கற்பனை விற்பனங்களையும், நான் கண்டறிந்ததில்லை. மனிதர்கள் சொல்லில் எனக்கு நம்பிக்கையில்லை, அவர்கள்

உண்மையை உரைப்பதில்லை. ஆயினும், அவர்கள்பேரில் குற்றமில்லை; தாங்களே தெரிந்துகொண்டல்லவோ பிறருக்கு உரைக்கப்போகிறார்கள்? ஆயினும், தெரியும் என்கிற அகங்காரம் மாத்திரம் நெஞ்சளவும் நிரம்பியுள்ளது. ஆகையினாலே நான் அறிந்திருக்கும் சொற்ப விஷயங்கள் மனிதர்களிடத்துக் கற்றுக்கொண்டவையல்ல. என்னைச் சூழ்ந்திருக்கும் பக்ஷி மிருகாதிகளின் குணகுணங்களை ஆராய்ந்து ஊகித்துத் தெரிந்துகொள்ளப்பட்டன. நான் அநுஷ்டித்துவரும் நீதிமார்க்கங்களும், தீச்செயல்களில் நான் கொண்டிருக்கும் மாறா வெறுப்பும், எல்லாம் அப்பிராணிகளிடத்தே கற்றுக்கொள்ளப்பட்டன." என்றனன்.

இப்படிச் சொல்லிப் பின்னும் சொல்லுகின்றான். "தேனீக்கள் தினந்தோறும் உழைப்பதைக்கண்டு, நானும் சோம்பலின்றி உழைக்கக் கற்றேன். எறும்புகள் இடைவிடாமல் முயன்று இரைதேடிச் சேர்ப்பதுகண்டு, நானும் அவ்வாறே மேலால் வேண்டும் பொருள்களை இப்போதே சேர்த்துவைத்துக்கொள்ளலானேன். என் நன்றியுள்ள நாயின் விசுவாசமும் நன்றியுணர்ச்சியும் கண்டு, நானும் அவ்வாறு என் எஜமானனிடத்தில் நன்றிவிசுவாசமுடையவனாய் இருக்கக்கற்றேன். அன்றிலின் அகலா நேசத்தைக்கண்டு என் மனைவியை நானும் விடாது நேசிக்கலானேன். கோழிகள் தம்பெட்டைகளைக் குளிரால் வருந்தாமல் சிறகாலணைத்துக் காப்பதுகண்டு, நானும் அவ்வாறே என் குழந்தைகளை ஆதரவாகக்காக்க வேண்டுமென்று தெரிந்துகொண்டேன்.

"இவ்வாறே, இன்னமும் பிறரை நிந்தித்திகழாமை, அகங்கரித்து வெல்லாமை முதலான அநேக நீதிமார்க்கங்களையும், பக்ஷிமிருகாதிகளின் குணகுணங்களைக்கண்டே தெரிந்துகொண்டேன். "ஊமைக்கோட்டான்" என்று உலகில் அதனை இகழ்தலினாலே, கலகலவென்று களங்கமின்றிப் பேசாமல் மவுனம் சாதித்திருத்தலால் புத்திமானென்று பெயர் வாங்க எண்ணுதல் அறியாமை — தெரிந்து கொண்டேன். சள சள தொ[...] ஓயாமாரிபோலப்பேசுவதிற் பயனில்[...] பது, கீச்சுப்பீச்சென்று கத்திக்கொ[...] கும் கிளிப்பிள்ளையை ஒருவரும் ம[...] னாலே அறிந்துகொண்டேன். பிறர்[...] கவர்தல் தீமையென்பது, பருந்து ஓ[...] லிய கொன்றுதின்னும் கொடிய பிரா[...] யாவரும் வெறுத்தலாலே தெரிந்து[...] டேன். புறங்கூறுதல், பொறாமை[...] முதலியவைகள் விஷத்தினும் கொடியன[...] தலினாலே, விஷஜந்துக்களாகிய பாம்பு[...] முதலியவற்றைக்கண்டு நடுங்கி வில[...] போல, நம்மையும் வெறுப்பார்கள் என[...] அத்துர்க்குணங்களினின்றும் நீங்கலா[...] இவ்வாறே ஒவ்வொரு பிராணியினின்[...] வளவு அற்பமாயினும் உற்று நோக்கு[...] எவ்வளவோ உண்மைகளை உணர்ந்து[...] லாகும்." என்றனன். இந்தவார்த்தை[...] கேட்ட பண்டிதர் இடையனை நோக்கி "[...] அறிவும் பெருமையும் உண்மையாகவே [...] சத்தக்கவைகளே. நீ சொல்லியபடி [...] பண்டிதர்களை நம்புதற்கிடமில்லை. அவர்[...] அநேகமாகத் "தான் பிடித்த முயலுக்கு [...] றேகால்" என்றபடித் தாம்கொண்ட [...] கையை நிலை நிறுத்தவேண்டும் என்னும்[...] வாதத்தாலும், அகங்காரத்தாலும், உண்[...] ஒருவழியிருக்க ஒருவழியாகச் சாதிப்பார்[...] பிராணிகளோ அப்படியல்ல. அவை நம[...] ஒருபோதும் வஞ்சிப்பதில்லை. அவற்றின் ந[...] குணங்களைக்கண்டு, யதார்த்தங்களை[...] தெரிந்துகொள்பவர்களுக்கு, உண்மைய[...] வுண்டாமென்பதில் தடையில்லை. அ[...] ஞானத்தால் தானே வேறே பாண்டித்தியம[...] லாமல் விவேகமும் மேன்மையும் அடைய[...] கூடுமென்பதும் உண்மையே:" என்[...] சொல்லி இடையனை மெய்ச்சி விடைபெற்[...] கொண்டு போனார்.

# TALES OF TENNALIRAMA.

*THE FAMOUS COURT JESTER OF SOUTHERN INDIA.*

BY

**Pandit S. M. NATESA SASTRI, B.A., M.F.L.S.**

(*Member of the London Folklore Society.*)

**Price—As. EIGHT.**

Becoming a Professional Jester. 2. Escaping from the punishment of being trampled ephant. 3. Escaping from the punishment of being cut off by the sword. 4. Appear- his head concealed. 5. Getting the sentries whipped. 6. Obtaining absolute license to es. 7. Cauterization of Brahmans. 8. Rearing a colt. 9. Rearing a kitten. 10. Pro- the labour of thieves. 11. A great doctor overthrown. 12. An unsuccessful conver- . A great poet disgraced. 14. Deceiving the wrestler. 15. Converting a black dog hite dog. 16. Executing the paintings. 17. Requesting to protect his family.

*ivil and Military Gazette.*—The tales are amusing and to the folklorist may be of nterest.

*imes of Malabar.*—* * * The little book has its value for the student of folklore, and hink, be received with appreciation in England.

*he West Coast Spectator.*—Delightful reading.

*llahabad University Magazine.*—Delightful and pleasant as are the witticisms of the ster, Tennalirama, they are not without their didactive value.

*Lucknow Advocate.*—The stories which resemble our own Birbal anecdotes are really g.

*Iadras Times.*—Highly interesting and amusing.

*India.*—"Curious and interesting."

*Arya Patrika.*—The tales are full of humour, very amusing and calculated to brighten up ountenance at once.

Apply to—G. A. NATESAN & Co., Esplanade, Madras.

ஜீ. ஏ. நடேசன் அண்டு கம்பனி, எஸ்ப்ளனெடு, சென்னபட்டணம்.

## SOME TAMIL BOOKS.

| | Rs. | A. | P. |
|---|---|---|---|
| RAMAYANA—BALAKANDAM | | | |
| Pandit S. M. Natesa Sastri. | 1 | 12 | 0 |
| RATASARAM: | | | |
| K. Kuppuswami Mudaliar, B. A. | | | |
| Part I. Paper bound. | 0 | 10 | 0 |
| A CHARITRAM | | | |
| T. S. Narayana Sastri. | 1 | 0 | 0 |
| ASILAN | | | |
| Y V. A. Gopalakrishna Aiyar. | 0 | 10 | 0 |
| LATI MADHAVA | | | |
| Y M. C. Sadagopachariar. | 0 | 5 | 0 |
| LOSOPHIC SONGS OF THE INDIAN BEGGAR | | | |
| Y M. Ratnaswamy Aiyar. | 0 | 4 | 0 |
| RUPAVATI | | | |
| BY V. G. Suryanarayana Sastri, B.A. | 1 | 0 | 0 |
| KALAVATI | | | |
| BY V. G. Suryanarayana Sastri, B.A. | 1 | 8 | 0 |
| THE POET'S FEAST | | | |
| BY V. G. Suryanarayana Sastri, B.A. | 0 | 8 | 0 |
| NATAKAVIAL | | | |
| BY V. G. Suryanarayana Sastri, B.A. | 0 | 8 | 0 |
| TANIPPASURATTOGAI OR A BOOK OF SONNETS IN TAMIL. | | | |
| BY Paridimarkalaijnan. | 0 | 4 | 0 |
| CURTAIN LECTURES | | | |
| BY A Swadesamitran. | 0 | 8 | 0 |
| DINADAYALU | | | |
| BY A Swadesamitran. | 0 | 8 | 0 |
| SETHUMAHATYAM | | | |
| BY N. Swaminatha Sastriar. | 1 | 0 | 0 |

***Apply to—G. A. NATESAN & Co., Book-Sellers, Esplanade, Madras.***

ஜீ. ஏ. நடேசன் அண்டு கம்பனி, எஸ்ப்ளனெடு, சென்னபட்டணம்.

olklore in Southern India. In English by Pandit Natesa Sastri, B. A., Member of the London Folk- ociety.

Part I. Re. 1 0 | Part III. Rs. 1 8
„ II. Re. 0 8 | „ IV. Rs. 2 0

Or Rs. 5 a Set. Postage and V. P. charges extra. y a few sets available. Don't miss this opportunity to secure a rare work which is now out of print. Apply sharp to the Secretary, D. K. Agency, Triplicane.

The Gospel of Budha: by Paul Carus. Paper cover: price Rs. 1-8, by v. p. post Rs. 1-1¼, Only a few copies on hand. Apply sharp to the Secretary, D. K. Agency Anandáshrama, Triplicane, Madras.

IN THE PRESS—WILL BE SHORTLY PUBLISHED.

THE VIVEKA CHINTAMANI SERIES.

# KANTHIMATHI—A NOVEL IN TAMI

(AFTER SCOTT'S TALISMAN)

BY

K. V. SUBHAYYA IYER, B.A., L.T.

கே. வி. சுப்பய்யர், பி. எ., எல். டி., அவர்களால்

இயற்றப்பட்ட

காந்திமதி

என்னும் தமிழ்க்கதை

சீக்கிரத்தில் புத்தக ரூபமாய் வெளியாகும்.

---

MOTHERS SHOULD REMEMBER WHEN SELECTING AN ARTIFICIAL FOOD FOR THEIR B

THREE DISTINCTIVE CHARACTERISTICS OF **MELLIN'S**

**FOOD**

தாய்மார் குழந்தைகளுக்கு கைப்பால் கொடுத்து

வளர்க்க நேரிடுங்கால் கவனிக்கவேண்டியது:—

மெல்லின்ஸ் ஆகாரம்

1. இலகுஜீரணகாரி; 2. சரிபக்குவ இலகுசாதனகாரி;
3. உமிமூக்கு முதலான அஜீரணவஸ்துக் கலப்பில்லை.

1. It is easily digestible and very assimila nourishing;
2. It is readily soluble and may be prepared seconds;
3. It is free from husks and indigestible mat would cause irritation.

குழந்தைகளுக்கு ஜீரணேந்திரியம் பூப்போலிருப்பதால் மிகவும் இலகுஜீரணகாரியான கொடுக்கவேண்டிய தவசியமாயிருக்கிறது. மெல்லின்ஸ் ஆகாரத்தின் மேற்கண்ட முக்கிய குணங்களா சிறு குழந்தைகளுக்கும் ஒத்துக்கொள்வதோடு அதை உபயோகித்து ஜாக்கிரதையாகக் குழந்தைகளை துவருவதினால் குழந்தைகளை மிகப்பாதித்துக்கொல்லும் வயிற்றுப்போக்கு, வலிப்பு, இன்னும் தே யுருக்கும் இதர வியாதிகள் முதலியன உண்டாகாமல், அவைகளின் உபாதி மிகக் குறைந்திருக்கின்றன

மெலின்ஸ் ஆகாரம் இந்தியாவில் எங்கும் எல்லா வியாபாரிகளிடத்திலும் கிடைக்கும்.

---

மாதிரிப்புட்டிகளும், சுதேசபாஷைகள் எல்லாவற்றிலும் அச்சிடப்பட்ட உபயோகிக்கும் முறை வ களும் "Care of Infants in India" என்று இங்கிலீஷில் எழுதப்பட்ட ஒருபுஸ்தகமும் மொத்தவி ஏஜண்டுகளாகிய, பின்வரும் கம்பனியாருக்கு எழுதிக்கொள்ளக் கிடைக்கும்.

**Madras: OAKES & CO., Ltd.; Bombay: LATHAM, ABERCROMBIE & (
Calcutta: MACKENZIE, LYALL & CO.; Rangoon: LATHAM, BLACK & (
Kurrachee: H. J. RUSTOMJEE & CO.; Cocanada: HALL, WILSON & (**

ADVERTS: CONTRACT RATES.—Yearly Rs. 120 for a full page and Rs. 70 for half a page. English Advts. at 1 inch single column per insertion. For further particulars apply to MR. C. V. SWAMINATHA AIYAR, *Secretary, D. K. Ag Triplicane, Madras.*

(REGISTERED-NO. M. 108.)

APRIL, 1902. [No. 12.

# THE VIVEKA CHINTAMANI

## MONTHLY TAMIL MAGAZINE AND REVIEW.

DEVOTED TO THE DIFFUSION OF GENERAL KNOWLEDGE.

# விவேகசிந்தாமணி

...வைப் ✣ பரவச்செய்வதற்கான ✣ மாதாந்தரத் ✣ தமிழ்ப்பத்திரிகை.

"அறிவுடையா ரெல்லா முடையா ரறிவிலா
ரென்னுடைய ரேனு மிலர்."—குறள்.

CONTENTS. PAGE.



அட்டவணை. பக்கம்.



[Thick Paper Edition for Patrons.] PUBLISHED BY [Minimum Subscription Rs. 5.

C. V. SWAMINATHA AIYAR,

Secretary, Diffusion of Knowledge Agency, Triplicane,

MADRAS.

Thin Paper Edition for the People. Price of Single Copy As. 6.

*All Rights Reserved.*

Subscription Price: Yearly Rs. 4; If Paid Half-Yearly Rs. 2-2

FOR FULL TERMS OF SUBSCRIPTION SEE INSIDE.

EDITORIAL AND PUBLISHING OFFICE: } { PRINTING OFFICE: GRAVES, COOKSON & CO.,

IN THE PRESS—WILL BE SHORTLY PUBLISHED

## MADRAS RAILWAY Co.

### Surplus Stores for Sale.

சென்னை ரயில்வே கம்பெனியாரிடம் மிகுந்துபோன சாமான்கள், யந்திரங்கள், இன்னும் பலவிதமான உபகரண சாமான்கள் விற்பனைக்கிருக்கின்றன. அவைற்றில் சில கீழே குறிக்கப்பட்டிருக்கின்றன.

| | |
|---|---|
| Blocks, iron, galvanized, of sorts and sizes. | Paper binders with brass screws. |
| Balances, Pooley's, to weigh 400 lbs. | Paper Drawing Demy. |
| Beam, for tripod scale. | Do. Do. Mounted Foolscap size. |
| Chains, iron. | Paper Drawing Letter size. |
| Compasses, proportional, and Napier's. | Do. Loan, Medium size. |
| Divers' Boots. | Powder, Terra de Sienna burnt. |
| Emery flour and powder. | Paper, Tracing 60" x 40" |
| Fish Plates, Bolts and Nuts. | Pincers, carpenters,' |
| Measures, tin, oil graduated. | Pipes, Copper $5\frac{3}{4}$." |
| Nails, brass-headed. | Do. Do. 6," |
| Optical square. | Rails, iron, double-headed, |
| Panel pens $1\frac{1}{4}'' \times 1\frac{1}{2}''$ No. 14. | Ratchets for Screw Jacks. |
| | Rulers, rolling, parallel. |
| | Wire, brass, B. S. W. G. Nos. 12 and 17. |

விற்பனைக்கிருக்கும் சாமான்களின் ஜாடாவான ஜாப்தா. அதன் விலை குறிக்கப்பட்டுத் தயாராயிருக்கிறது. ராயபுரத்திலிருக்கும் சென்னை ரயில்வே ஜெனரல் ஸ்டோர்கீபருக்கு எழுதிக் கேட்டுப் பெற்றுக்கொள்ளலாம். சாமானைப் பார்க்க விரும்புகிறவர்கள் ஆபீஸ்நேரத்தில் வந்து பார்வையிடலாம்.

H. BONHAM CARTER, MAJOR, R. E.,
Agent & Manager.

Madras Railway,
Agent and Manager's Office,
Rayapuram Terminus,
Madras, 3rd June, 1901.

## விவேகசிந்தாமணிப் பிரசுரங்க[ள்]

இவை ஒவ்வொன்றும் நாணயமான இங்கி[லீஷ் பைண்டு] செய்து கில்ட் எழுத்துகள் பதித்துள்ளன.

மாக்ஷிமைதங்கிய இந்தியா சக்கிரவ[ர்த்தினி]கிய விக்டோரியா மஹாராணியவர்கள் [...] 27-படங்களோடும், இந்தியா கவர்ன்மெண்[...] ஆபீஸ்' இவைகளின் அமைப்பு, அமுல்செலு[...] விவரங்களோடும் பிரசுரிக்கப்பட்டிருக்கிறது. V. P. P. ரூ. 1-8. அதிக கில்ட்கொடுத்தது ரூ[...] ரூ. 1-10.

புத்தாது திவ்விய சரித்திரம்.—விலை [...] V. P. P. ரூ. 1-2. அதிக கில்ட்கொடுத்தது : ரூ[...] மூலமாக ரூ. 1-4.

விவேகமஞ்சரி.—புஸ்தகம் I. இதிலடங்கி[...] கோல்பர்ட்சரித்திரம். (2) சத்தியதேவதைக்[...] சிவாஜிமஹாராஜா சரித்திரம். விலை அணா 14 [...] ரூ. 1-2 ) அதிக கில்ட்கொடுத்தது: ரூ. 1.(V. P. [...]

இம்மூன்று புஸ்தகங்களும் கில்ட் எழுத்துகள[...] கோ கட்டடம்செய்து தனித்தனியாகவும் கிடை[...]

(1) கோல்பர்ட் சரித்திரம் : துணிவியாப[...] விருந்து முதல்மந்திரிஸ்தானத்துக்குவ[...] பன்கதை. விலை அணா 5. V. P. P. அ[...]

(2) சத்தியதேவதைகதை : விலை அணா 5. [...] மூலமாக அணா 8.

(3) சிவாஜி மஹாராஜாசரித்திரம் : விலை [...] V. P. P. மூலமாக அணா 9.

ஆபத்துக்கிடமான அபவாதம் அல்லது க[...]பாள் சரித்திரம். விலை ரூ. 1-8.(V. P. P. ரூ. 1-14[...] கில்ட் கொடுத்தது : ரூ. 1-12. (V. P. P. ரூ. 2-2.)

வேண்டுவோர் சென்னை திருவல்லிக்கேணி அ[...] ஏஜன்ஸி, காரியதரிசி ஸி. வி. சாமிநாதய்யர் [...]ளுக்கு எழுதிப் பெற்றுக்கொள்ளலாம்.

### கமிஷனுக்கு விற்கப்படும் புஸ்தகங்கள்.

| | | |
|---|---|---|
| பார்யாதர்மம் | ... ... | விலை ரூபா 1. |
| மாலதிமாதவம் | ... ... | விலை அணா 5. |
| கல்வி விளக்கம் | ... | விலை ரூபா 1-0-0. |

தபாற்கூலி பிரத்தியேகம்.

*Apply to the D. K. Agency, Triplicane, Madr[as]*